உ

மதுரைத்தமிழ்ச்சங்க ஸ்தாபகரான

பொ. பாண்டித்துரைத்தேவர்

தொகுத்த

# பன்னூற்றிரட்டு.




இது

மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்

உபஅக்கிராஸனாதிபதியும், ஆண்டிபட்டிஜமீந்தாருமான

ஸ்ரீமான்

**S. Rm. M. Ct.** பெத்தாச்சிசெட்டியாரவர்கள்

செய்தபொருளுதவியாற் பதிப்பிக்கப்பட்டது.

---

மதுரைத்தமிழ்ச்சங்கப்பிரசுரம் ௫.

---

மூன்றாம் பதிப்பு.

தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை.

1920



இராமநாதபுரமகாராஜா, பாண்டித்துரைத்தம்பி

ராஜராஜேஸ்வரஸேதுபதி

தமிழ்ச்சங்கத்தின் நிரந்தர அக்கிராஸனாதிபர்



ஸ்ரீமான்

பொ. பாண்டிததுரைததேவர்

தமிழசசங்க ஸதாபகா.



ஸ்ரீமான்

பெத்தாச்சிசெட்டியார்

தமிழ்ச்சங்கத்தின் நிரந்தர உப அக்கிராஸனாதிபதி.

# அதிகாரவகராதி.

# பதிப்புரை.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தை நாட்டி அதற்கு நிரந்தர அக்கிராசனாதிபதியாயிருந்து தமிழைப்பரிபாலித்துவந்த வித்வத்பிரபுவான பாலவனத்தம் ஜமீந்தார் பொ. பாண்டித்துரைத்தேவரவர்கள் தாம் அரிதிற்புரிந்துபோந்த தமிழ்நூலாராய்ச்சியின் பயனைத் தமிழுலகு எளிதினடையும்படி, ஓரோர்விஷயம்பற்றிப் பல நூல்களிற்புலப்படும் பாடல்களை ஒருநிலைக்களப்படத்தொகுத்து, அதிகாரமுறையாக வகுத்து, பன்னூற்றிரட்டென்பெயரிட்டு, இந்நூலை இற்றைக்குச் சற்றேறத்தாழ இருபதுவருடங்கட்குமுன்பு அச்சிட்டு வெளியிட்டனர். வெளிவரவே இது தமிழ்ப்புலவர்பலராலும் பாராட்டப்பட்டுப் பிரசங்கோபகாரியாய் விளங்குகிறது.

சென்னைச்சருவகலாசங்கத்தாரும் இதனை நன்குமதித்துப் பல வருடங்கள் தொடர்பாகப் பிரவேசபண்டித வகுப்புக்கும், பிரதம கலாசாலை வகுப்புக்கும் பயிறற்குரிய தமிழ்ப்பாடங்களை இதிலிருந்து தெரிந்தெடுத்துக்கொண்டனர். அவற்றுட்கல்வியதிகாரம் என்னும் ஒரு பகுதிக்குத் தேவரவர்களால் ஓரரியவிரிவுரையும் எழுதப் பெற்றது.

இந்நூலின் சிறப்பினையும், இதனை ஆக்கியளித்த தேவரவர்களது பெருந்தகைமைபொருந்திய குணாதிசயங்களையும் இந்நூற்குச்சிறப்புப் பாயிரமாக மகாமகோபாத்தியாய பிரும்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களும், தேவகோட்டை வித்வான், வீ. ர. லெ. சிந்நயச்செட்டியாரவர்களும் பாடிய செய்யுட்களாலும் சென்னை கிறிஸ்தவகலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதராயிருந்த வை. மு. சடகோபராமாநுஜாசாரியரியற்றிய பின்வரும் வெண்பாக்களாலும் அறியலாம்.

அந்நாளுந்தமிழையாதரித்தபாண்டியர்போல
இந்நாளினிதுதித்தவேந்தலென—எந்நாளும்
பாரோர்புகழ்ந்திடுமிப்பாண்டித்துரையையலால
ஆரோபுலவர்க்கரண்.

இன்னூற்றிரட்டிதனுக் கேதுரைகளின்றெனவே
பன்னூற்றிரட்டொன்று பாலித்தான் — நன்னூலை —
வேண்டித் துரையேயிட்டாராயாவுந்தேர்ந்த
பாண்டித்துரையாம்பதி.

இந்நூலின் பலர்க்கும் விருப்புடைமையாலும், தேவரவர்களது ஔதாரியத்தாலும் முதற்பதிப்புப் புத்தகங்கள் விரைவிற்செலவாய் விட்டமையால், பின்னும் பலபாடல்களைப் பிறபல நூல்களினின்றும் தெரிந்தெடுத்துச் சேர்த்து நூலைப்பெருக்கி மதுரைத்தமிழ்ச்சங்கத்துக் குரியதாக்கி மறுமுறை பதிப்பிக்கப்பட்டது. அப்பதிப்பும் சிலவருடங்களிற் செலவாய் விலைக்குக்கிடைப்பது அரிதாய்ப் பலரும் விரும்பிக் கேட்பதுதெரிந்து மூன்றாமுறை பதிப்பிக்கக் கருதிப் பாண்டித்துரைத் தேவரவர்கட்கு நண்பரும் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் உப அக்கிராசனாதிபதியாயுமுள்ள ஆண்டிப்பட்டி ஜமீந்தார் மகாராஜராஜஸ்ரீ, சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்கள் மனமுவந்துதவிய பொருளுதவியால் மதுரைத்தமிழ்ச்சங்கத்துக் குரியதாக இப்பதிப்பு பதிப்பிக்கப்பட்டது.

இப்பதிப்பு, பெரும்பாலும் இரண்டாம்பதிப்பைத் தழுவியதே யாயினும் அச்சுப்பிழைகளைத் திருத்தியும் மறித்துவந்த சிலபாடல்களை அகற்றியும் இன்பச்சிறப்பென்னும் அதிகாரத்தை விலக்கியும் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

இப்பதிப்புக்குவேண்டிய பொருளுதவிபுரிந்த ஸ்ரீமான் பெத்தாச்சி செட்டியாரவர்கள் தமிழபிமானமும் உதாரசீலமும் தமிழ் மக்களால் மிகவும் பாராட்டற்பாலன.

தமிழ்ச்சங்கக்கலாசாலை உதவிப்பாத்தியாயர் நல்லசிவன்பிள்ளை இதனை அச்சிடுங்காலத்து அச்சுப்படிப்பார்வைநோக்கிக்கொடுத்து உபகரித்த வுதவிபாராட்டற்பாலது.

திரு. நாராயணையங்கார்,
செந்தமிழ்ப்பத்திராதிபர்.

உ

திருச்சிற்றம்பலம்.

# இரண்டாம்பதிப்பின் முகவுரை.



உலகத்திற்றோன்றிய ஆன்மகோடிகள் பலவற்றுள்ளும் கிடைத்தற்கரிய இம்மானிடப்பிறப்பெய்தியார்க்கு உறுதிப்பொருளாகவுள்ளன, அறம் பொருள் இன்பம் வீடென நான்கே என்பதும், அவற்றினியல்பை அறிந்துய்தற்கு நூலுணர்ச்சி இன்றியமையாக் கருவி என்பதும் பலருந்தெளிந்த வுண்மைகளாம். நூலென்பன பிறபாஷைகளிலுமுள்ளனவேனும், அவையெல்லாம், வடமொழி தென்மொழிகளில் உள்ள நூல்கள்போல அப்புருஷார்த்தங்களைச் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராய மக்கட்கேற்பத் தெளியவுணர்த்துவன ஆகா. நம் முன்னோர் மானிடர்க்கு வேண்டப்படும் உறுதிப்பொருள்கள் நான்கேயெனத் தந்நுட்பமதியாற் கண்டுணர்த்தியவாறு, பிறநாட்டார் கண்டுவைத்திலரன்றோ! "அறம்பொருளின்பம் வீடடைதனூற்பயனே" என, உறுதிப்பொருணான்கையும் உணர்த்துவனவற்றையே நூலிலக்கணமாக நம்மவர்வழங்கினமையுங்காண்க. நம் தமிழ்மொழிகளிலுள்ள அரும்பெரும்பொருள்களைப் பிறநாட்டுமொழிகள் அவாவியேற்று இப்போது கமழவாரம்பிக்கின்றன; இது நமக்கு எற்றந்தருவதென்பது உண்மையாயினும், இப்பெருமைக்கு மூலமாயுள்ள நம்தமிழ்மொழியை ஆதரித்து அபிவிர்த்தி செய்யினன்றோ, அவ்வேற்றம் நமக்குச்சித்திக்கும்? தற்காலத்தே, நம்மவரது பாஷாபிமானத்தின்நிலை மிகவும் பரிதபிக்கத்தக்கதே. சுருங்கச்சொல்லின், தேசபாஷையின் வளர்ச்சியின்றி, நாம் பெருமையை எதிர்பார்த்தல் ஆடையின்றி அலங்கரித்தலையொக்குமன்றோ? இவ்வாறு, நூற்பெருக்கம், பழமை, பெருமைகளுமுடைய தெய்வமொழியாய நம் தமிழ்ப்பாஷை, கற்பாரும் ஆதரிப்பாருமில்லாது சுருங்கிவரும் இக்காலத்தே, அதன்கண் இலைமறைகாய்போல மறைந்துகிடக்கும் உறுதிப்பொருணுட்பங்களைப் பன்னூலோதிப்பயனெருக்கறிதல் கூடாமையால், அவற்றைப் பலரும் எளிதினுணர்தற்கும், ஒவ்வொரு விஷயத்தைக் குறித்துப் பன்னூலாசிரியருங்கொண்ட அருங்கருத்துக்களை ஓரிடத்தில் ஒருசேர அறிந்து மகிழ்தற்கும் அநுகூலமாக ஒருநூல் தொகுக்கவேண்டுமென யான் நெடுநாட்கொண்டிருந்த அவா, இற்றைக்கு எட்டு வருஷங்கட்கு முன்னர் (1898௵) "பன்னூற்றிரட்டு" என்னும் நூலாகப் பரிணமித்தது

செய்தி பலரும் நன்கறிந்தது. அந்நூல் வெளியேறியகாலத்தே, அதனைத் தமிழ்மக்கள் பலரும் விரும்பி ஏற்றுக்கொண்டதுபோல வே, கனந்தங்கிய சென்னைச் சர்வகலாசங்கத்தாரும் அதிற் சிலபகுதிகளைப் பரீக்ஷைகட்குப் பாடமாகவைத்து அபிமானித்தனர். அப்போது அச்சிடப்பட்ட பன்னூற்றிரட்டுப் பிரதிகள் அதிகமின்மையால், அவைபெரும்பாலும் எனவிஷ்டர்கட்கு விநியோகிக்கப்பெற்று ஜனோபகாரத்திற்குக் காணாவாயின. பின்னரும் தமிழ்நாட்டார்பலரும் அதனைப்பெரிதும் விரும்பினமையால் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் நன்மைகருதி அச்சங்கத்தின் ஐந்தாம் பிரசுரமாகப் பன்னூற்றிரட்டினிரண்டாம் பதிப்பை வெளியிடத்துணிந்தேன். இவ்விரண்டாம் பதிப்பில், முற்பதிப்பிற் சேராதநூல்கள் பலவற்றினின்று சஅதி- பாடல்கள் அதிகமாகத் திரட்டப்பட்டு ஏற்றவிடங்களிற் சேர்க்கப்பெற்றுள்ளன. அஃதாவது—முற்பதிப்புச் செய்யுட்களின் தொகை 1647; இப்பதிப்புப்பாடல்கள் 2 3.. இவ்வாறு புதியவாகச்சேர்த்த செய்யுட்களைப் பிரித்துக்காட்டுதற்கு நக்ஷத்திரக்குறிகள் ஆங்காங்கு அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்பதிப்பின்பொருட்டு ஆதாரமாய்ப் பெற்ற புதிய நூல்களுள், சிவப்பிரகாசப் பெருந்திரட்டென்பது ஒரு சிறந்த பழையநூல்; இந்நூலுட்கண்ட நூல்கள் பல இக்காலத்து இறந்தவைபோலவே தோற்றுகின்றன; இப்பெருந்திரட்டினின்று எடுக்கப்பட்ட பாடல்கட்கு, அவற்றின்கண்ட நூற்பெயருடன் "சிவ-" என்னுங் குறிப்பை (சிவப்பிரகாசப் பெருந்திரட்டு என்பதன் சுருக்கமாக) யுடன் அமைத்துக் காட்டியுள்ளேன்.

மிக்க கல்விமான்கள் செய்தற்குரிய இவ்வருங்காரியத்தை, அற்பக் கல்வியும் சிற்றறிவுமுடைய யான் இயற்றத்துணிந்ததையும் அதனால் உண்டாகக்கூடிய குற்றங்களையும் நல்லறிஞர் பொறுத்தருளுமாறு அவரைப் பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலின் இரண்டாம்பதிப்பு முடியுங்காறும் என்னுடனிருந்து எனக்கு மிக்கவுதவிபுரிந்துவந்த—மதுரைத்தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகர்: ஸ்ரீமத்-மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கட்குப் பெரிதும் நன்றியறிதற்கடப்பாடுடையேன்.

எடுத்துக்கொண்ட பன்னூற்றிரட்டிரண்டாம் பதிப்பு முயற்சியை இனிதுமுடியத் திருவருள் சுரந்த எல்லாம்வல்ல எம்மிறைவன் இணையடிகளை இறைஞ்சுகின்றேன்.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,
மதுரை.
27—8—1906.

இங்ஙனம்,
பொ. பாண்டித்துரை.



திருச்சிற்றம்பலம்.

# முதற்பதிப்பின் முகவுரை.



உலகத்தில் தோன்றிய ஆன்மகோடிகள் பலவற்றுள்ளும் கிடைத்தற்கரிய இம்மானுடப்பிறப்பெய்தியார்க்கு உறுதிப்பொருளாயுள்ளன அறம், பொருள், இன்பம், வீடெனநான்கே. அவற்றினியல்பை நூலுணர்ச்சியானல்லது அறிதல் கூடாமை தெள்ளிதிற்றெளிந்த தொன்மையாம் நூலென்பன பிறபாஷைகளினும் உளவேனும் அவையெல்லாம் வடமொழி, தென்மொழியென்னும் இவ்விருபாஷைகளினுமுள்ள நூல்கள்போற் புருஷார்த்தங்களை யுணர்த்தாவென்பது திண்ணமே. உலகின்கண் வழங்கிவரும் பலபாஷைகளினும் மிகச்சிறந்தன வடமொழி தென்மொழி என இவ்விரண்டேயென்பது பலரும் நன்கறிந்த விஷயமாதலால் அதற்குப் பிரமாணங்கள் எடுத்துக்காட்டல் மிகையாம். இவையிரண்டும் தம்மில் ஒன்றற்கொன்று ஒத்துப் பயில்வோர்க்கு உறுதிப்பொருளை பயப்பவே எனினும் வடமொழியினுந் தென்மொழி சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையராய மானிடர்கட்கு எளிதினுணர்தற்பாலதாய்த் தன்னிடத்துள்ள மிக்க இனிமைபற்றியே தமிழ் எனக்காரணப் பெயர்பூண்டுள்ளது. இத்தகைச் சிறப்புவாய்ந்த தமிழ்மொழி ஆதரவற்றுக் கற்போரின்றி மிக்கமாலின்யத்தையடைந்துவருதல்பற்றி யாவரும் விசனிக்கத்தக்க இக்காலத்து, அதன்கண் இலைமறை காய்போன்று சலவிக்கிடக்கும் பல விஷயங்களுள்ள பன்னூல்களைப் பயின்றொருங்கறிதல் கூடாமையால் அவற்றையொருங்கே எளிதினுணரவும், ஒவ்வொருவிஷயத்தையுங் குறித்துச் சொல்லும் பலநூலாசிரியர்கருத்தையு மொருங்கேயறிந்து கொள்ளவும் ஓர் நூல் தொகுக்க நெடுநாள் யான் கொண்டிருந்த எண்ணத்தை என்னுடைய பிரிய நண்பரும் வைசிய குலமணியும் வித்வன் மணியும் சைவமணியும் எனதிருகண்மணியுமாகிய தேவகோட்டைவீ. ர. லெ. மா-ா-ா-ஸ்ரீ சிநயச்செட்டியாரவர்களுக்குத்

தெரிவித்தேன். அவர்கள் இது மிகச்சிறந்த விஷயமாயும் லோகோபகாரமாயுமுள்ளதாதலால் இனிக் காலநீட்டியாது உடனே முயன்று முடித்தல் வேண்டுமென எனக்கு வேண்டிய உறுதிகூறி இதில் முயலுமாறு செய்தார்கள். அவ்வாறே முயன்று அதற்கு வேண்டிய நூல்களை ஆராய்ச்சிசெய்துகொண்டுவருமிடையே யான் மகாமகத்திற்குக் கும்பகோணஞ் சென்றிருந்தகாலத்தில் அவ்விடத்துள்ள காலேஜ் தமிழ்ப்பண்டிதரும், லோகோபகாரமே பொருளாகக் கொண்டு தமது தேகத்தின் எய்ப்பினையுமறியாது அரியசங்கச் செய்யுள்கள் புராதன காவியங்கள் முதலியன அச்சிட்டு வெளியிடுவதே தமது பொழுதுபோக்காகவுடைய மகாவித்வானும் என தினனு பிரிய நண்பருமான மகா-ள-ள-ஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களிடத்தும் யான்செய்துபோதரும் இக்காரியத்தையறிவித்தேன். அவர்கள், இவ்வாறு ஒருநூல் தொகுக்கத் தம் எண்ணம் பலகனவான்கள் தம்மையே வேண்டிக்கொண்டார்களென்றும், தமக்குப் போதுமான அவகாசமில்லாமையால் தாம் அதில் முயல நேரவில்லையென்றும், யான் அதனை இடையறாது முயன்று விரைவில் முடித்தல்வேண்டுமென்றுங் கூறியதுடன், இவ்வாறே ஆதிகாவியங்களுட் சிலவும் சங்கச்செய்யுள்களுட் சிலவுமாய நூல்களினின்றும் திரட்டிய புறத்திரட்டென்னும் ஓர் நூல் இன்னார் தொகுத்ததென அறியக்கூடாமற் கையெழுத்துப் பிரதியிலிருந்ததை அன்போடும் என்னிடம் அளித்தார்கள். அங்ஙனம்பெற்ற அந்நூலுள் வளையாபதி குண்டலகேசி நாரதசரிதை மேருமந்தரபுராணம் பெருந்தேவனார்பாரதம் சாந்திபுராணம் பொருட்பொருள் விளக்கம் முதலிய நூல்களினின்றும் சேர்க்கப்பட்டுள்ள செய்யுட்களுள் சிலவற்றை இதிற்சேர்த்திருக்கின்றேன். யான் இதில்முயன்றிருப்பதையறிந்த என்னண்பர்கள்பலரும் இதனை விரைவில் முடிக்கவேண்டுமென்று என்னை அடிக்கடி தூண்டினார்கள். அன்புடன் கூறிய அவர்கள் சொல்லை மேற்கொண்டு யான்விடாது முயன்றும் எடுத்துக்கொண்ட நூல்கள் யாவும் பார்த்து இந்நூல் தொகுத்தற்கு ஒன்றரைவருடகாலமாயிற்று. அதன்மேலும் எனது நேர்பார்வையில் இவ்வூரிலேயே அச்சியற்றச் சற்றேறக்குறைய எட்டு மாதங்களாயின. ஆக இந்நூல்தொகுத்து அச்சிடுதற்கு இரண்டு வருடங்கட்கு மேலாயின.

# முதற்பதிப்பின்முகவுரை

இந்நூற்கு என்னன்பர்களான பலவித்வான்கள் சிறப்புப்பாயிரங்கள் கொடுத்திருப்பினும் அவையெல்லாம் இந்நூலுடன் சேர்த்தச்சிடுவதற்குநேர்ந்த சில அசௌகரியங்களால் இன்னமும் நூல் தாமதியாது வெளிவருவது கருதி இம்மட்டோடு அச்சிட்டு வெளிப்படுத்தினேன். இதனையே, இரண்டாம்பதிப்பில் இன்னும் பல நூல்களினின்றும் வேண்டியவற்றைத்திரட்டிச் செவ்வையாக அச்சிடக் கருதியுள்ளேனாதலால் அப்பதிப்பில் அவர்களளித்த சிறப்புப் பாயிரங்களைச் சேர்த்து வெளியிடுகிறேன். அதற்காக என்னை மன்னிக்க அவர்களை மிகவுங்கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்னும் என்னன்பர்களுட் சிலர் இதற்கு எடுத்துக்கொண்ட நூல்களுடையவும் நூலாசிரியர்களுடையவும் வரலாறுகளை இந்நூலுடன் சேர்த்து அச்சிடவேண்டுமென்று கொண்டவிருப்பத்தை அடுத்தபதிப்பில் நிறைவேற்றுவேன்.

மிக்க கல்விமான்களாற் செய்யவேண்டிய இக்காரியத்தை அற்பகல்வியும் சிற்றறிவுமுள்ள யான் இயற்றத் துணிந்தமையையும் அதனாலுண்டாகக்கூடிய இந்நூலிலுள்ள பிழைகளையும் வித்வான்கள் பொறுத்தருளப் பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலைத்தொகுக்கத் தொடங்கியதுமுதல் அச்சிட்டு முடியுங்காறும் என்னுடனிருந்து இது விஷயத்தில் எனக்கு மிக்க உதவி புரிந்துவந்த எதிர்க்கோட்டை வித்வான் மகா-ா-ா-ஸ்ரீ திரு. நாராயணையங்காரவர்கட்கு யான் மிக்கவந்தனமும் நன்றியும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

எடுத்துக்கொண்ட இந்நூலினிது முடியத் திருவருள் சுரந்த எல்லாம்வல்ல எம்மிறைவனிணையடிகளை யிறைஞ்சாநின்றேன்.

இங்ஙனம்,

பாண்டித்துரை.

# செய்யுள்முதற்குறிப்பகராதி.

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|

உ

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப் பாயிரம்.

சென்னை பிரஸிடென்ஸிகாலேஜ் தமிழ்ப்பண்டிதர்

மஹாமஹோபாத்தியாயர்

## உ. வே. சாமிநாதையரவர்கள்

இயற்றியது.



பூமலி சந்தக் காமலி வரைவா
ழுருந்தவ னன்பிற புரந்தருண் மேன்மை
பெறறே யுவமை யற்றே யிலங்கு
நன்மொழி யாய தென்மொழித் துறையி
லற்புமிக் கான்ற பற்பல கவிஞா
கலையெலாங் குழைத்துச சுவையெலா மமைத்தே
யாக்கிய வினிமை தேக்கிய பன்னூற்
பரப்பெலா மாயு ணிரப்புறு மாந்தர்க்கு
ஓதுறல் சிறிதுமொல் லாதென நினைந்து
கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற பிணிபல வென்று
மேலவா தொடர்பைச சால மதித்தே
யாழித் தரைபுகழ் காழித தவப்பயன்
முதலிய பெரியோர் நுதலிய தமிழ்மறை
யென்னும் பெயர்கொடு மன்னுபன் முறைகளுந்
துங்கக் கூடற் சங்கத தமர்ந்த
தொல்லிசைப் பயனுர் நலவிசைப் புலவ
ரருளிய மேன்மைப் பொருளிய னூல்களும்
பொருவில் பெருமைத் திருவள் ளுவர்முத
லான்றோ ரருள்சுவை சான்றபன் னூல்களு

மருத்திகூர் புலமைத் திருத்தகு தேவ
னுதியா மறிஞ ரோதிய வாய
மங்காச சுவைசா லலங்கார பியததுட்
கிடைப்பன வாய தொடைக்கவி நூலகளுஞ
செப்பமா கச்சி யப்ப வாசான்
முன்னுப் பகர்பல செந்நாப் புலவரெம
மருளிய லகற்ற வருளிய நூல்களு
நலமுற மகிழ்விற் பலமுறை யாராய்ந்
துட்டெளி வளிகருங் கட்டெளி வனையவாய்
மன்பதைக் களவா வின்ப நிரப்பி
யிழுக்க மகன்ற வொழுக்க வகைநுவல
பாடல்க டமமை நாடலசெய தெடுத்தே
பாதத்தே பால்வகை யாதத்தே நிறுவித்
தொன்னூற் றிரட்டெனச சொல்ல வேசிலர்
தென்னூற் றிரட்டெனச் செப்ப வேசிலர்
நன்னூற் றிரட்டென நவில வேசிலர்
பன்னூற் றிரட்டெனப் பகர்பெயர் நிறீஇ
யளித்தா னம்மவொன் றவனு ரெனினே
யுறுஞ்சிறப் பமைந்த குறிஞ்சிமுன் னய
திணைவளம் பழுநிய செம்பிநன் னாடன்
மாசுதுன் னுவணம் பூசுவெண் சாந்தின்
விதுவைநேர் மாடப் புதுவைமா நகரான்
பவஞான மறுத்துயர் சிவஞானத் தேவர்
பவத்திர னெனவரு பவித்திரக் குரிசில
ஆரிய முதலாஞ் சீரிய மொழிகளி
னுளவென வுரைக்கும பளகறு சுவைசால
பல்கலை களுமிகப் பல்கலை மருவ
வளித்தே புலமைநன் றூக்கிய தேக்கட்
டளித்தார்ப் பொன்னுச் சாமி வரோதயன்
பண்ணிய வளவில் புண்ணியப் பேற்று
லன்னவ னெனவே நன்னர்வந் துதித்தோன்
தீதிகந் தோங்குஞ் சேதுநன் னாட்டுக்

கரசா யமல பரசிவ பத்திக்
காகர மாயருட் சாகர மாய்வள
மகலையிற் றழீஇய முகலை மாநகரி
லொண்மைப் பாற்கர னொத்தொளிர் வெண்குடைத்
தண்மைப் பாற்கர சாமி நரேந்திரற்
கண்ணிய வன்பன் புண்ணிய வின்பன்
எவ்வழி லருந்தமி ழினசுவை யோடு
சைவவின் சுவைதெரி வையைமா நதியான்
சால வனத்தந தருபவை யகற்றிப்
பால வனத்தம் பாலித் திடுவோன்
நேரியன் பரியைக் கோரமா மென்றும்
வீரவெஞ் சிலைக்கைச் சேரலன் பரியைப்
பாடல மென்று நீடுசீர்க் கவிஞர்
செப்புறக் கொட்புறு திட்பவெம் பரியான்
செந்தமிழ்ச சோம சுந்தர விலாசன்
அமிழ்துற ழினிய தமிழ்வலோர் தமக்கு
மருமறை நாவி னந்தணர் தமக்கு
மாறறி காட்சிப் பேறுடை யார்க்குந்
திசைபோம் பெரும்புக ழிசைவல் லவர்க்குஞ்
செயிரிலாத் தேர்ச்சி வயிரியர் தமக்கு
மற்றவை மரபிற் கற்றவர் திரட்கு
மாதுய ரொடுவரு மாதுலர் தமக்கு
மடையா வாயி லகன்கடை யுடையான்
வாய்ந்தநுண் ணூல்பல வாய்ந்து மகிழ்ந்தே
நாவலர் பல்லோர் பாவலா பல்லோா
சூழும படிதழீஇ வாழும் பெருமையன்
அன்னமு மாவு மன்னமா ணவர்பலர்க்
கனமுந் தனமு மாடையு மேடையுங்
கொடுததே மிடியைக் கெடுத்தே மகிழ்வித்
தருந்தமிழ் பயிற்றிப் புரந்திடு மேன்மையன்
தீயவெம் பிணியா லாயபஃ றுன்பிற
காற்று மாந்தர்க் கருந்துணை யானோன்

இருவே றுலகத தெனுங்குறட் கெதிரா
வருவே றொழுக்க மாண்பினி லதிகன்
குளிரின் சொல்லொடு மிளிர்குலோத் துங்கன்
அகத்தூக் கேமுனந் தொகுத்தே மென்னு
மகத்துறை யறவரு மூக்கிர பாண்டியன்
வருத்த மகற்று திருத்தகு தேவன்
களங்க மிலாது விளங்குபொய் யாமொழி
மெச்சி யடைந்த நச்சினார்க் கினியன்
தீதிய லாதுசெய் நீதிநூல் பலவுந
தெரிமே லவர்சொல் பரிமே லழகன்
பொடியார்க்கு மேனி யடியார்க்கு நல்லான்
புலவர்க டியாகளைந திலகு கற்பகம்
வந்தடை வோர்துயா சிநதுசிந் தாமணி
மண்ணிலு மீககிளர் விண்ணிலு மமைமநத
வண்மைய னெனவே யொண்மையி னுயா
சீரிய சொலமிளிர் பாரி சாதம்
தால மாந்தரின் றுலங் துறநதெனத
தாஎந் துறக்குந் தமிழ்தொன் னூல்கள்
பழுதா காவணம பரிசோ திப்பித
தெழுதா வெழுத்தி லியைவித் திடுவோன்
தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணை
யாக நினைப்போர் சோக மகற்ற
வானினு மானினும் வழங்குசெங் கரததான்
தேனினும் பாலினுந தித்தித் தோங்குந்
தண்பா மாலை சாற்றுவோன் புறப்பொருள்
வெண்பா மாலை வெளிவரச் செய்தோன்
திருநது கவின்சே ரருந்தமிழ் மடந்தை
யணிமே கலையா மணிமே கலைய
யாவரும பெறசசெய் மாவுப காரி
பண்ணமை விழுசசீர்த தண்ணுமை யொடுங்களத்
தெழிலிசை யோடும யாழிசை யோடு
மெழுது மறைக ளிசைத்தே யன்பிற

றெழுது பல்லோர் சூழ்ந்திருந் தேத்த
வுருத்திர சின்ன மருத்தியிற் றாங்கி
மனமொழி மெய்யிற் றினமொழி வின்றி
யீசனை யன்பிற் பூசனை புரிவோன்
சிவனடி யவரைச் சிவனென மதித்து
வேண்டிற் றுதவும் விழுச்சீர்ப்
பாண்டித் துரைப்பெயர் படைத்தகோ மானே.

உ

சிவமயம்.

தேவிகோட்டை

மகா-ள-ள-ஸ்ரீ

## வீர. லெ. சிந்நயச்செட்டியாரவர்கள்

## இயற்றியது.



பூமகள் கெழீஇய காமரு மார்பக்
கரியவன் செருக்கி விரிநிலங் கீள்பு
தன்னமு மெய்யாப் பொன்னடிக் கடவு
ளருமறை கிளந்த குருமலர் வாயாற்
பொருத்தபு கொங்குதேர் திருத்தகு மதிமலி
யென்றிம் முதலாத் தின்றமுச செய்யுளோ
டகப்பொரு ளியலை யுகப்பக் கழறியும்
தென்றல்வெற் புறுவற் கன்றறி வுறுத்தும
அவைக்களத் தமரூஉச் சுவைத்திறன் றெரிநதுங்
குரவர் நால்வர் பரவிசைப் பனுவல்
கேட்டாங் கனையர் வேட்டாங் கருளியும்
விறந்தன மொழியிற் சிறந்தன் றுதுவெனப்
புலனறை போய கலரு முணர்பாக்
காராக் காதலிற் பாராட் டோவான்
முன்னி வளர்த்த கன்னி நறுந்தமிழ்

யினபயி றேளதது மன்பதை யனைத்து
யிம்மை மறுமை செம்மைவீ டாய
நயன்குலா முமமைப் பயன்பெறற் பொருட்டுநூல்
பலவற் றுள்ளுங் கலவிக் கிடந்த
வொழுகக வகைநுவ விழுக்கறு பாவினங்
கோத்து நிரலே யோதது முறைவகுதது
இரங்கொலிப் பாற்கடற் பரம்பிய வமிழ்தினை
மாயோன் றிரட்டி யீயோர்க் களித்தெனத்
தெருணனி கொளுததும பொருளொருங் கோருழி
மொண்டுநா வலர்கூட் டுண்டு மகிழிய
வின்னூற் றறூஉப் பன்னூற் றிரட்டெனும்
பெயர்ததொன் றமம வியற்றி யுதவினன்
ஒளிமரன் முன்னர்க் களிமயி லகவப்
பருவக் கொணமூ வருகுலாய்த் தவழ்சசி
திருவா னைக்காப் பெருமா னுவப்பத
தோட்டிமைப் பொறியை யாட்டிமா னுழல்வு
கடுக்கு மல்லற் றடுக்கற் குறிஞசியும்
வெள்ளிற திரளகனி முள்ளிடைச சேக்குதல்
தபிர்தக வாடவ ருயிர்கடை தொறுவியர்
பொன்றிணி முலைததலை வென்றிகோள் வெஃகி
மூசிய வைந்துதி யூசி நடுவ
ணென்பிறைப் புறமூங் கான்பொலி முல்லையும
செந்தளிர் பொதுளி யுந்துதே மாவின்
மைக்குயிற் றெருழுநி தொக்ககூஉம் பெற்றி
பளகுதீர் கடைசியர் கிளவியை வெகுகிட்
டுறந்தெழு மானத திறந்துபா டுள்ளிக்
கொழுந்தழ னுப்பண் விழுந்துடல கருகி
மேற்று வுருப்ப மாறறு தலறலைத்
துணைதரு கிற்கும் பணைகளுன் மருதமும்
உமண்டியர் வாள்விழிக் கமன்றதெம முழுதுங்
கோறு மென்மரின் வீறுசால் பரதவர்
கபலுடங் கந்தோ மயிலைக குலததை

வலையகப் படுத்து நிலைகுலைத் தட்டுவாய்ப்
பெய்திறு மாக்கு மொய்திரை நெய்தலும்
ஈண்டிச சிறந்துள பாண்டிப பாண்டில்வாய்
மாயிரு ஞாலத தேயிருள் வளாகம
பெரும்புறப் புணரி மருங்குசூழ் நேமிப்
பொற்றை நனந்தலை மறநெறிய விலங்கல
வேறுபஃ றிறந்த யாறென விவற்றைப்
படைக்கும் வண்ணமென் னடைத்தனி யோதிம
னுய்ந்துகை பழகியா வேய்ந்தன பொருள்போற்
புடையுடுத் தீர்மபா சடையிடை பொழிலுங்
தடம்பாம் புரியுளு சுடர்ந்தோங் கெயிலு
நீண்மணி மாடமுஞ் சேண்மலி ஞெள்ளலும்
வயங்கா நின்ற வியன்சீர் முகவைப்
பேரூ ராளி போரூ ராளி
கல்வி யுரத்தன் செல்வி யுரத்தன
பொன்னுச சாமி முன்னைப் பிறவிதோ
ரூற்றற னுருக்கொடு தோற்றியாங் கவன்பா
விளைய பசுங்கான் முளையென முளைத்தசேய்
நோக்குமங் கையர்க்குப போக்குபு கலன்கலை
யலர்பெரி தணிவித் திலகெழிற் செவ்வியன்
விண்ணக தாங்கி கண்ணென் றிரண்டா
னிமையாப் பார்ப்பினு மமையா தென்ன
வாயிர மெய்துமா மேயதொல வளத்தான்
அறலே பொழிநீ னிறமுகில வெள்கக்
காசும் பொலனுந தூசு நீவிராவுய்
வறியார்க் கீததெதிர் குறியா வள்ளல
எண்ணிலவிம் மிததொழில பண்ணிவை வலனுநன்
மன்றமி ழாசான் குன்றிமெய் குறுக
விலலா தல்ல தெல்லா மரபுளி
யோதி நுனித்தோர்ந் தேதிலர்க் கிசைத்துச்
செவ்வே தானு மவ்வா றியங்கியான்
மடற்கையி னீங்கிய வியற்கைநுண் ணறிஞன்

பொறையரு ளின்சொ லுறுதி வாய்மை
யின்னன வுயர்ந்த வெண்ணெண் பிற்கு
நாட்டின ரெடுத்துக் காட்டுதற் கமைந்தகோ
நீறுகண் டிகையுந் தேறுமைந் தெழுத்து
மொருவா துளத்துமெய்ப் பொருளாப் பற்றிச்
செறிவுறு மாவியு மறிவொரூஉம் பண்டமுங்
கண்ணுதற் கடிமையவ் வண்ணல துடைமை
யென்ற வுண்மை நன்று தெள்ளியோன்
கூற்றடர் குரைகழல் போற்றினன் போதுறு
யொழிவொழி யன்பின் வழிபடு குரிசில்
உன்னு போழ்தெனக் கென்னினு மினியன்
தொழுதகை யுக்கிர வழுதிப் பேரான்
ஈண்டைத் துறுநர் பாண்டித் துரையென
வழங்கவெண் மாதிர முழங்கிசை யவனே.



திருச்சிற்றம்பலம்.

# பன்னூற்றிரட்டு.

## அறத்துப்பால்.

### முதலதிகாரம் கடவுள்வாழ்த்து.

தேவாரம்.

1 பரிதியானைப்பல்வேறுசமயங்கள்
கருதியானைக்கண்டார்மனமேவிய
பிரிதியானைப்பிறரறியாததோர்
சுருதியானைக்கண்டீர்தொழற்பாலதே. (1)

2 ஆதியானையமரர்தொழப்படு
நீதியானைநியமநெறிகளை
யோதியானையுணர்தற்கரியதோர்
சோதியானைக்கண்டீர்தொழற்பாலதே (2)

திருவாசகம்.

3 வானாகிமண்ணாகிவளியாகியொளியாகி
யூனாகியுயிராகியுண்மையுமாயின்மையுமாய்க்
கோனாகியானெனதென்றவரவரைக்கூத்தாட்டு
வானாகிநின்றாயையென்சொல்லிவாழ்த்துவனே. (1)

### திருவாய்மொழி

4 *உயர்வறவுயர்நலமுடையவனெவனவன்
மயர்வறமதிநலமருளினனெவனவன்
அயர்வறுமமரர்களதிபதியெவனவன்
துயரறுசுடரடிதொழுதெழென்மனனே. (1)

### கந்தபுராணம்.

5 திருவந்ததொல்லைப்புவனத்தொடுதேவர்போற்றிப்
பெருவந்தனைசெய்தறிதற்கரும்பெற்றியெய்தி
அருவந்தனையுமுருவத்தையுமன்றிநின்றா
னொருவன்றனதுபாதந்தன்னையுளத்துள்வைப்பாம். (1)

6 பூமலர்மிசைவருபுனிதனாதியோர
தாமுணர்வரியதோர்தலைமையெய்தியே
மாமறைமுதற்கொருவடிவமாகியோன்
காமருசெய்யபூங்கழல்கள்போற்றுவாம. (2)

### விநாயகபுராணம்.

7 ஒருப்படுமறத்தினாலேயொண்பொருளின்பஞ்செம்பொற்
பருப்பதக்கடல்போலவந்துபயப்படுமதனைக்கேண்மோ
விருப்பொடுவெறுப்பிலாதமிக்கவெண்குணத்தோடொன்றா
யிருப்பவன்யாவனன்னானிணையடிவணங்கல்வேண்டும. (1)

### காசிகண்டம்.

8 நோக்கின்றிக்கண்டுநனிகையின்றிக்கொடுத்துமறைநுவல்வ
தாய, நாக்கின்றியறுசுவையுமினிதுணர்ந்துகாலின்றிநடத்
தல்செய்து, மூக்கின்றிமணங்கவர்ந்துஞ்செவியின்றிக்கேட்டு
மறைமுதல்வர்யார்க்கும், வாக்கன்றிமனத்தினுக்குமெட்டா
நின்றாமரைத்தாள்வணங்கல்செய்வாம். (1)

### இராமாயணம்.

9 உலகம்யாவையுந்தாமுளவாக்கலு
நிலைபெறுத்தலுநீக்கலுநீங்கலா
வலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கேசரணாங்களே. (1)

---

* இவ்வடையாளமிட்டபாடல்கள் இரண்டாம்பதிப்பிற்சேர்க்கப்பட்டவை.

### சூளாமணி.

10 வென்றான்வினையின்றொகையாகிவிரிந்துதன்க
ணொன்றாய்க்கிடந்தவுணர்வின்னொழியாதுமுற்றுஞ்
சென்றான்றிகழுஞ்சுடராகுமொளிமூர்த்தியாகி
நின்றானடிக்கீழ்ப்பணிந்தார்வினைநீங்கிநின்றார். (1)

### சீவகசிந்தாமணி.

11 மூவாமுதலாவுலகமொருமூன்றுமேத்தத்
தாவாதவின்பந்தலையாயதுதன்னினெய்தி
யோவாதுநின்றகுணத்தொண்ணிதிசெல்வனென்ப
தேவாதிதேவனவன்சேவடிசேர்துமன்றே. (1)

### திருக்குறள்.

12 தனக்குவமையில்லாதான்றாள்சேர்ந்தார்க்கல்லான்
மனக்கவலைமாற்றலரிது. (1)

13 வேண்டுதல்வேண்டாமையிலானடிசேர்ந்தார்க்
கியாண்டுமிடும்பையில. (2)

ஆ_ செய்யுள் 13. கடவுள்வாழ்த்து முற்றிற்று.

## உ-அதி. பெரியோரியல்பு.

### விநாயகபுராணம்.

14 ஐதுகுடியிற்பிறந்தருநூலாய்ந்துசெல்வத்துயர்ந்ததனு
லெய்தலரிதுபெருமையஃதெய்துங்கொடையொப்புரவாதி
செய்தற்கரியசெய்துபிறர்செயிர்கூறுமற்றருக்காம
லுய்திநெறிபிற்பிறழாமலொழுகுவார்க்குள்ளுநிலைமக்கா. (1)

15 அன்பொப்புரவுகண்ணோட்டமழியாவாய்மைநாணுதி
யின்பம்பெருக்குநற்குணங்களெல்லாநிறைந்தசான்றோர்க
டுன்புற்றவாகுமினியனவேசூழ்வர்துணையின்வினைமுடிப்பா
வன்பிற்றளரார்கடலாகுமடங்கிதமேதாற்றணுரே. (2)

16 ஆன்றகுடியன்†பெண்பதநல்லறநீதிகளின்வழுவாமை
சான்றமக்கட்பண்பாகுநதன்னையுடையார்நகையானு
மான்றமிகழார்பகையிடத்துமதியாரவர்தநற்குணமே
யென்றவுலகம்பாராட்டுமெல்லாப்பயனுமவர்மாட்டாம். (3)

## சேதுபுராணம்

17 அரியநானமறையந்தணர்தங்களிற்
பெரியராவர்பிறர்க்கிடரெண்ணிலார்
தரியலாதமரென்றிருசார்பினுந்
துரியரோபொருணுண்மையுணர்ந்துளோர். (1)

## திருக்குடந்தைப்புராணம்.

18 *இருவினைப்பயனுபுள்ளவின்பதுன்பங்கள்வந்து
மருவின்முன்புடற்கமைந்தவாமெனவிருப்புஞ்செய்யார்
பருவருமவெறுப்புங்கொள்ளார்பவஞ்சத்தேயுறக்கம்வைத்தா
ரொருவருமுயர்செம்பொன்னுமோடெனக்காணுநீரார். (1)

## மாயூரப்புராணம்.

19 *இன்புவந்துற்றபோதுமெதிர்மறையுற்றபோது
முன்புடலூழுமென்றேவிருப்புறார்முனிவுஞ்செய்யா
ரன்புசிற்றுயிர்கட்குமமைத்துவாழ்கின்றநீரார்
வன்புமும்மலமுநீங்கத்திருவருண்முழுகுமாண்பார். (1)

## சூதசங்கிதை

20 நடந்தாலுமிருந்தாலுநவின்றாலுந்துயில்கொண்டு
கிடந்தாலும்விழித்தாலுங்கிளர்முடிமன்னவர்முதலோர்
தொடர்ந்தாலுந்தொழுதாலுந்துதித்தாலுமவமதித்துக்
கடந்தாலுமெய்ஞ்ஞானிகமலவிலைப்புனல்போல்வான். (1)

## பிரபோதசந்திரோதயம்.

21 *பரிதீக்கொடுங்கள்ளர்பயமுண்டுபொருளோர்க்
கரிலவாய்த்தபகையச்சமரசாள்பவர்க்குண்
டரிவேட்டவர்க்குண்டுறுங்காலபயநம்
வைராக்கியர்க்கேதில்லவநமக்கோர்பயமே. (1)

† எண்பதம் — எளிய சமயக்காட்சி.

22 *அறிஞருமறிவிலாருமயலுளோரியற்றலாகு
முறுதுயருழப்பாரொத்துமொத்திலரொன்னலார்மேற்
பிறிதுறுமிடர்க்குநோவர்பெருமையோர்மற்றையோர்தம்
வறிதுறுமுடலிற்றுக்கும்வன்றுயர்க்கழிவர்மாதோ. (2)

23 *நெஞ்சகமுருகுந்தன்மைமீட்டறிவுடையார்க்கன்றி
வஞ்சகர்திறத்துமுண்டாமென்னினுமொவ்வார்மாத
ரஞ்சனவிழியாலுள்ளமறிவிலார்குழைவரீசன்
றஞ்செனுமருட்கணோக்காற்றம்முளங்கரைவர்சான்றோர்.

24 *மாசற்றார்செய்யவேண்டுமாதவம்யாதுமில்லை
யாசற்றார்செய்வதில்லையாதலாலினியசெய்கை
பேசுற்றபெரியோர்க்கில்லைபிறர்க்குமஃதில்லையென்றாலும்
ஓசைத்தெண்டிரைசூழ்பாரிலவர்க்கிவரொவ்வாரொவ்வார்.(4)

ஞானவாசிட்டம்.

25 *எத்திறத்தோரெவ்வனமாமிடையூற்றைறக்கடந்தெளிதினேற
வல்லோர், அத்திறத்தோரேபுருடரவர்களேதொழற்குரியோ
ரவரேசான்றோர், மெய்த்திறத்தோர்சேரிடமாய்விநயநீதி
படைத்தருளால்விளங்காநிற்குஞ், சுத்தகுணவெவ்வனமிவ்
வுலகிலுளதோவிசுமபிற்சூழ்காடுண்டோ. (1)

26 *ஆனதிறத்தாற்குடும்பபாரவியாபாரத்திலணுகும்போது
போனபொருட்கிரங்காமற்பொருந்துபொருண்மாத்திரமே
புசித்துவாழ்வாய், தீனமுறவருபொருளைசசிந்தியார்வந்த
பொருட்டெதென்றெண்ணார், ஞானபரராணோர்க்குச்சுபாவ
மாங்குணமிதுவேநளினக்கண்ணாய். (2)

ஒழிவிலொடுக்கம்

27 *நாயேறிவீழ்ந்ததென்னடாததுகிலென்ஞானிக்குப்
பேயாஞ்சகமபழிதத்தென்பேணுகிலென்—றோயார்
பெருமைசிறுமையிலைபின்னுமுன்னுமில்லை
வரைவறறுவேண்டியசெய்வார். (1)

### † சிவ-சமாதி.

28 *யாவனிக்குமெய்புணர்ந்தவனவனேயிமயப்
பாவைதன்னையோபாகமவைத்தவன்பரவுவது
நாவின்மங்கையைநயந்தவனவிலவதுமவனைப்
பூவின்மங்கையைப்புணர்ந்தவன்புகழ்வதுமவனே. (1)

29 *கரையின்மெய்ஞ்ஞானவின்பப்பிரமமாங்கடலினுள்ளே
யொருவனதுள்ளமொன்றியொடுங்குமேலவனைப்பெற்றோர்
பெரியபேறெல்லாம்பெற்றார்பேணுமுக்குலமுந்தூய்தாம்
பொருவிலானிருந்ததேயமபுண்ணியபூமிதானே. (2)

### சிவ–பூரணப்பிரகாசம்.

30 *மலலன்ஞாலமுடிமன்னர்தமமையுமவழுத்துமாறிலர்மனத்
தினு, னல்லர்தீயரெனநாடிடாபிறரைநாகமேல்விழினுமவேக
மாக, கொல்லவேலர்புடைசூழினுஞ்சிறிதுகூசிடார்மெலிவுகூறி
டா, ரலலவாமெனவிகறபியார்சமயவாதரோடுமறிவாளரே. (1)

31 *புண்ணியபாவபலன்களுங்கருதாபூசியார்புனறனின்மூழ்கார
பண்ணியபாதுமைதெய்வமென்றுணரார்பட்டினிவிடார்மகம்
பண்ணார், மண்ணியமணிமந்திரமருந்தறியார்வடிவிலோர்குறி
கொளார்மற்று, மெண்ணியகருமமியாவையும்புரியாரிம்மையு
மறுமையுமிகழ்ந்தார். (2)

32 *வையமாமணியாதியாகவழுவகின்றமகமேறினா
துயயமாநதியாடினாதறியாதவஙகளொடுகுததுளாா
மெய்யமாதிகளெட்டுமேவினர்மெய்புணர்ந்தவாகையிலே
மையமாத்திரமிட்டவர்க்குளதானபேறடையார்களே. (3)

† சிவ-சமப்பிரகாசப்பெருந்திரட்டென்னு நூல். இங்ஙனம வருமிடந்தோறுங் கொளக.

### சிவ—மெய்ம்மொழி.

33 *†தண்ணிதானசண்டாளர்கள்சாதிவேதியரென்
றெண்ணுமாறிலன்ஞானியிசசெகததியாவையுந்தா
னுண்ணுமோதனமாதலானுணடியாதியினுந்
திண்ணிதாநலனநீங்குசிநதிததிடான்சிறிதும். (1)

34 *ஓசைகேட்டிடுகசெவியறுசுவைபுமுண்ணநாவுடலமூறறிக
வாசமூக்குயிர்ப்பவுருவுகணகாணமறறுமெக்கருமமுஞ்செய்க
வாசுடைப்புலன்களனுபவிததிடினுமப்பின்மூழ்கிடினுமம்புயத்
தின், பாசடைநீரிறபற்றிலாததுபோற்பற்றிலாபரமயோகி
களே. (2)

### சிவ—தத்துவரத்நாவளி.

35 *ஒழுக்கமேவினருயர்ந்தவரும்பர்மாமுனிவ
ரிழுக்குநீசர்களெண்ணுநான்மறையவரியாரும
பழிக்குமூர்க்கர்நறபண்டிதர்பாவியரறவோர்
புழுக்களியாவையுமபோதமென்றிகழ்வுறார்புகழார்.

### சிவ—தோன்றி ‡

36. *ஆடையுமலருஞசாந்துமகிற்புகைதீபமுன்னாக்
கோடிவேதியரைப்பூசைகுறைவறசசெய்தாலுமப
பேடறஞானிதன்கைபிடிததிடுமபிச்சைதானு
நாடிடிற்சமமாமென்றேநாதனுனவிலுந்தானே. (1)

37 *எவர்தம்மனையின்ஞானியெய்திடுமவனைககண்டு
மேவியபிதிரரெலலாமவிருமபிநின்றுடாநிற்பர்
பாவியநரகமென்னும்படுகுழியொருவியென்று
மோவிலாவீடுபெற்றேறமெனவெழுமுவகையாலே.

### சிவ—ஞானசாரம்.

38 *மன்னனைமனிதரெல்லாமரிமாசனததில்வைத்து
மன்னியவுபசாரத்தாலவந்தனைசெய்யுமாபோற்
பன்னருமறையினந்தம்பயின்றமெய்ஞ்ஞானிதன்னைப்
பொன்னுலகதனிற்றேவரிருடிகள்பூசைசெய்வார். (1)

---

† தண்ணிதானசண்டாளர்=தாழ்மையுடையதாகிய சண்டாளத்தன்மையுடையவர். 'தண்மைதான்குளிர்ச்சிதாழ்வு' என்பது சூடாமணி நிகண்டு.

‡ இது தொன்னெறியென்றிருக்கவேண்டும்.

### சிவ-பரமார்த்ததரிசனம்.

39 *யாதொருபொருளையெல்லாவுயிர்களுமிருள்போற்காணா
ரோதருஞானியத்தையுளங்கையிற்கனிபோற்காணும்
யாதொருபொருளையெல்லாவுயிர்களுமென்றுங்காண்பார்
காதலினஞானியதனைத்தக்கண்ணினாற்றெரியக்காணான். (1)

40 *பலங்கள்வேண்டியபரிசெலாம்பலிப்பதுபரமதத்துவஞானி
நலங்கொளுமமேமந்திரநாடோறுநயந்தவனீராடுஞ், சலங்க
ளாததமாமவன்றிருமேனியேசகலதெய்வமுஞ்செவ்வாய்
மலர்ந்தவாசகமேமறுபிறப்பெனவருபிணிமருந்தாகும். (2)

### சிவ-தருந்திரட்டு.

41 *கண்முதற்புலன்கள்யாவையுமொடுக்கிக்காணவாகுலமறக்
கடிநதங், குண்மைகாண்விருப்போடுயிர்க்கெலாம்பரிவுற்
றுற்றசிற்றின்பத்தையுவர்த்து, வண்மையாமுணவுவந்தவா
கண்டுவாட்டமுமகிழ்ச்சியுமின்றித், தண்மையாமுடம்பு
தான்றனதெனுத்தன்மையோன்றத்துவமுணர்வான்.

### தாயுமானவர்பாடல்.

42 காலமொருமூன்றுங்கருத்திலுணர்ந்தாலுமதை
ஞாலந்தனக்குரையார்நல்லோர்பராபரமே. (1)

43 இல்லாதகாரியத்தையிச்சித்துச்சிந்தைவழி
செல்லாமைநல்லோர்திறங்காண்பராபரமே. (2)

### நன்னெறி.

44 முனிவினுநல்குவர்மூதறிஞருள்ளக்
கனிவினுநல்கார்கயவர்—நனிவிளைவில்
காயினுமாகுங்கதலிதானெட்டிபழுத்
தாயினுமாமோவரை. (1)

45 உடற்குவருமிடர்நெஞ்சோங்குபரத்துற்றோ
ரடுக்குமொருகோடியாக—நடுக்கமுறார்
பண்ணிற்புகலும்பனிமொழியாயஞ்சுமோ
மண்ணிற்புலியைமதிமான். (2)

நீதிநெறிவிளக்கம்.

46 கலலாரெழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்து
மல்லனசெய்தற்கொருப்படார்—பல்பொறிய
செங்கட்புலியேறறப்பசித்தாந்தின்னுவாம்
பைங்கட்புனத்தபைங்கூழ். (1)

இராமாயணம்.

47 தீர்வருமின்னறமமைசசெய்யினுஞ்செய்யசிந்தைப்
பேரருளாளர்ததஞ்செய்கையிற்பிழைப்பதுண்டோ
காரவரைசிறுததிதனனைக்கனலெழுக்கலக்கக்கண்டு
மார்கவியமராருய்யவமிழ்துபண்டளிததன்றே. (1)

48 புகழ்நது நறுவிரைக்கலவைபூசிடினுமபுல்லியரைப்போலநோக்கி
யிகழ்நதுபலபேசிடினுமவிருப்புவெறுப்பெண்பதவர்க்கென்று
மில்லை, யகழ்நதமலககிழுங்கினராய்ப்பசிவேளைகிடைததவற்றை
யமுதாததுய்த்துத், திகழ்நதிடுவர்சிறிதேனுநாளைக்குவேண்டு
மெனச்சிந்தைசெய்யார். (1)

49 விண்ணிடையேகுதன்மீளப்பாதலத்திற்புகன் மீட்டுப்புவியின்
மேவ, லண்ணியபல்பரகாயப்பிரவேசஞ்செயலுமுறையுமவ்விட
ததே, யெண்ணியவெலாமவரச்செய்திடன்முதற்செய்சிததி
களையெனறுமவேண்டார், புண்ணியபாதகமிலார்பெருமையி
லார்சிறுமையிலார்பொய்மெய்யிலலார். (2)

50 ஆடுவாருன்மத்தர்போற்றிரிவார்நகைததிடுவாரங்கைகொட்
டிப், பாடுவாரின்றிருந்தவிடநாளையிருக்கமனம்பறறார்சுற்றிக்,
கூடுவாதமிற்கூடார்கந்தையன்றிவேறுடுக்கைகொள்ளாரன்
றா, நீடுவார்புகழ்ப்பெருமையிற்றெனறுமதிப்பவரார்நிகழ்த்
துவாரார். (3)

புறப்பொருள் வெண்பாமாலை.

51 இமமூவுலகினிருள்கடியுமாய்கதிர்போ
லமமூனறுமுற்றவறிதலாற—றம்மி
னுறழாமயங்கிபுறழினுமென்றும்
பிறழாபெரியோர்வாய்சசொல். (1)

### குண்டலகேசி.

52 வாயுவினைநோக்கியுளமாண்டவயநாவா
பாயுவினைநோக்கியுளயாக்கையவையேபோற்
றீயவினைநோக்குமியல்சிந்தனையுமில்லாத்
தூயவினைநோக்கியுளதுப்புரவுமெல்லாம். (1)

### நாலடியார்.

53 பாவமுமேனைப்பழியும்படவருவ
சாயினுஞ்சான்றவர்செய்கலார்—சாத
லொருநாளொருபொழுதைத்துன்பமவைபோ
லருநவையாற்றுதலின்று. (1)

54 கடையெலாங்காய்பசியஞ்சுமற்றேனை
யிடையெலாமின்னாமையஞ்சும்—புடைபரந்த
விற்புருவவேனெடுங்கண்ணாய்தலையெலாஞ்
சொற்பழியஞ்சிவிடும். (2)

### பழமொழி.

55 அடர்ந்துவறியராயாற்றுதபோழ்து
மிடங்கண்டறிவாமென்றெண்ணியிராஅர்
மடங்கொண்டசாயன்மயிலன்னாய்சான்றோர்
கடன்கொண்டுஞ்செய்வார்கடன். (1)

### திரிகடுகம்.

56 ஒல்வதறியும்விருந்தினனுமாருயிரைக்
கொல்வதிடைநீக்கிவாழ்வானும்—வல்லிதிற்
சீலமினிதுடையவாசானுமிம்மூவர்
ஞாலமெனப்படுவார். (1)

57 இல்லார்க்கொன்றீயுமுடைமையுமிவ்வுலகி
னில்லாமையுள்ளுநெறிப்பாடுமெவ்வுயிர்க்குந்
துன்புறவுசெய்யாததூய்மையுமிம்மூன்று
நன்றறியுமாந்தர்க்குள. (2)

### ஆசாரக்கோவை.

58 *பழியாரிழியார்பலருள்ளுறங்கா
ரிசையாதநோக்குகரவா—ரிசைவின்றி
யில்லாரை யெள்ளியிகழ்நதுரையார்தள்ளியுந்
தாங்கருங்கேள்வியவா. (1)

59 *எய்தாதவேண்டாரிரங்காரிழநததற்குக்
கைவாராவந்தவிடுக்கண்மனமழுங்கார்
மெய்யாயகாட்சியவர். (2)

### அறநெறிச்சாரம்.

60 *காய்தலுவத்தலகற்றியொருபொருட்கண்
ணாய்தலறிவுடையார்கண்ணதே—காய்வதன்கண்
ணுற்றகுணந்தோன்றாதாகுமுவப்பதன்கண்
குற்றமுந்தோன்றாக்கெடும. (1)

### நீதிவெண்பா.

61 *தாமரைபொன்முத்துச்சாமரைகோரோசனைபால
பூமருதேன்பட்டுப்புழுகுசவ்வா—தாமழன்மற்
றெங்கேபிறந்தாலுமெள்ளாரேநலலோர்க
ளெங்கேபிறநதாலுமென். (1)

62 *வென்றிவரியுகிரும்வெண்கவரிமான்மயிருந்
துன்றுமதயானைசசுடாமருப்பு—நின்றநிலை
வேறுபடினுஞ்சிறப்பாமெய்ஞ்ஞானிநின்றநிலை
வேறுபடினுஞ்சிறப்பாமே. (2)

63 *இநதுரவிநீள்கிரணமெங்குநிறைநதாலு
மிந்துரவிகாந்தத்திலகுமே—யிநதுரவி
நேததிரத்தோனெங்குநிறைந்தாலுநித்தனரு
ணேத்திரதேதோர்பாலேநிறைவு. (3)

64 *பொன்னுங்கரும்புஞ்புகழ்பாலுஞ்சந்தனமுஞ்
சின்னம்படவருத்தஞ்செய்தாலு—முன்னிருந்த
நற்குணமேதோன்றுநலிந்தாலுமுத்தமர்பால்
நற்குணமேதோன்றுநயந்து. (4)

65 *பாலினீர்தீய றுகப்பாலவெதுண்டுதிப்புகுந்து
மேலுநீர்கண்டமையுமேனைமைபோ—னூலினெறி
பற்றோரிருக்க றுயிர்கொடுத்துமாற்றுவரே
மற்றோர்புசலமுதித்தது. (5)

66 *எல்லோர்தமக்குமினிதுதவலன்றியே
நல்லோர்தமக்குதவிநாடாரே—வல்லதரு
நாடுநிதிமேகமயக்குதவலன்றியே
தாமுதவிநாடுமோசாற்று. (6

67 *திவாகரகிரணமிக்கசீதளமே
திங்களினுஞ்சந்தனமேசீதளமா—மிக்கிவற்றி
னன்புறுசாந்தமருளுடையார்நல்வசன
மின்பமிகுஞ்சீதளமாமே. (7

68 *கங்கைநதிபாவஞ்சசிதாபங்கற்பகந்தான்
மங்கலுறுமவறுமைமாற்றுமே—துங்கமிகு
மிக்குணமோர்மூன்றும்பெரியோரிடஞ்சேரி
லக்கணமேபோமென்றறி (8

திருக்குறள்.

69 இருமைவகைதெரிந்தீண்டறம்பூண்டார்
பெருமைபிறங்கிற்றுலகு (1

70 செயற்கரியசெய்வார்பெரியர்சிறியர்
செயற்கரியசெய்கலாதார். (2

71 அந்தணரென்போரறவோர்மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மைபூண்டொழுகலான் (3

ஆகச்செய்யுள் 58. பெரியோரியல்புமுற்றிற்று.

---

## ௩-அதி. அறச்சிறப்பு.

### கந்தபுராணம்.

72 தருமமென்றொருபொருளுளது தாவிலா
விருமையினின்பமுமெளிதிலாகுமா
லருமையில்வரும்பொருளாகுமன்னது
மொருமையினோர்க்கலாலுணர்தற்கொணுமோ. (1)

73 தருமமேபோற்றிடினனபுசார்ந்திடு
மருளெனுமகுழவியுமணையுமாங்கவை
வருவழித்தவமெனுமாட்சியெய்துமேற்
றெருளுறுமவ்வுயிர்சிவனைச்சேருமால். (2)

### காஞ்சிப்புராணம்.

74 அறமேமறங்கண்முழுதழிக்குமறமேகடவுளுலகேற்று
மறமேசிவனுக்கொருவடிவமாகுஞ்சிவனைவழிபடுவோர்க்
கறமேயெல்லாபபெரும்பயனுமளிக்குமயார்க்குமெவ்விடத்து
மறமேயச்சந்தவிர்ப்பதெனவறைந்தான்சாதாதபமுனிவன்.

### விநாயகபுராணம்

75 தேங்குவிண்போகமுஞ்சிறந்தமுத்தியு
மீங்குறுபாககமுமினிதுநல்கலா
லோங்கியவறத்தினையுளமுன்மூன்றினும
பாங்குறநித்தலுமபரிந்துசெய்தியால். (1)

76 வழுக்கறுமறத்தினைமற்றுச்செய்துமென்
றொழுக்கிடாதொல்லுறுமவகையினனுச்சொலு
மழுக்கெனுமுளத்தழுக்காறவாமுத
விழுக்கொடுவெகுளியுமின்றிச்செய்கவே. (2)

77 அன்புறுமறத்தினலடுக்குமின்பமே
யின்பெனத்தக்கதாலேனையின்பெலாந்
துன்பமும்பழியையுந்தோற்றுமாதலால்
வன்புறுமறத்தினைமறப்பிற்கேடுறும். (3)

### திருக்குற்றலப்புராணம்.

78 ஆதுலர்சாலைசோலையாவின்வாயுறைகண்ணாடி
யோதுவார்க்குணவுதண்ணீருறுபந்தர்மடந்தடாகங்
கோதிலாவுரிஞ்சுகண்ணங்கொலையுயிர்விடுத்தலேறு
மாதலைக்கெண்ணெய்கண்ணோய்மருந்துநன்மகப்பால்சோறு.

79 அறுசமயத்தோர்க்குண்டியழிந்தோரைநிறுத்தலட்டேண்
பிறரறங்காத்தலையம்பெணபோகமகப்பேறுய்த்த
னறியநீன்விலங்கூணவண்ணறைவிதன்சிறைச்சோறுதி
மழுதலத்தறமெண்ணான்குமனையறத்திவ்வூர்நல்கும். (2)

80 பூதானம்பரிதேர்யானைபொன்வெள்ளிவிளைவுகன்னி
காதானந்தலமெள்ளுக்கலைபணியடிமையில்லங்
கோதானமன்னதானங்கூறுமெண்ணிருதானத்தி
னோதானபலனுமன்னமிட்டுணபார்க்கருளுமிவ்வூர். (3)

### சேதுபுராணம்

81 திருவுமின்புஞ்சிறப்பும்புகழுமற்
றொருவராககலுநீக்கலுமுள்ளவோ
மருவும்புண்ணியமாநதர்ககவையெலாந
தருமமின்றெனிறறுமேசிதையுமால். (1)

### திருக்கூவப்புராணம்.

82 தருமமேயிணையில்பொருடரையிடைத்தகைசா
லொருமையின்பிணையுதவிவின்னுலகினுமுடன்போ
யருமையின்பமுய்த்தர்தகறசெறுமெனிலறமே
யிருமையுநதுணையாகுவதன்றிமற்றிலலை. (1)

### கூர்மபுராணம்.

83 அறந்திறம்பாதுநாளுமரும்பொருள்காமந்துய்ப்போர்
சிறந்தவிவ்வுலகந்தன்னிலளப்பருஞ்செல்வமெய்தி
மறங்கிளர்வடிவேலுண்கண்வானவர்மகளிரோடு
முறங்கிடாதின்பந்துய்க்குமுலகினிலினிதுவாழ்வார். (1)

திருப்பரங்கிரிப்புராணம்.

84 *தருமமேதனித்தஞான்றுதக்கதோர்துணையதாகுந்
தருமமேபொருள்களுந்தந்திடும்வருணனாலுந்
தருமமெய்யாகச்செய்யுஞ்சமயமாறுடனேமற்றுந்
தருமமேகாக்கும்வேந்தர்தடமுடியிடறுந்தாளாய். (1)

85 *இளமையர்காளையாரேனெழிலறுவிருத்தரேனும்
வளர்தருமங்கள்வேண்டுமருவுகண்ணாடிதன்னுள்
விளையுழுந்துருளும்போதுமேனிமெய்யன்றுகாலன்
வளைவதுமறியாரந்தோமட்டெடுத்திரைக்குந்தாராய். (2)

காசிரகசியம்

86 *சிறுபொருள்கைக்கொண்டோருஞ்செயததகுதருமஞ்செய்
தா, லுறுபொருள்கைக்கொண்டோர்செயறத்தினுமுயர்ந்து
தோன்று, முறுபொருள்கைககொண்டோருமுயர்வுறுத்தரு
மஞ்செய்யிற, சிறுபொருள்கைககொண்டோர்செய்யறத்தினு
ஞ்சிறிதாத்தீரும். (1)

87 தருமமேயுலகம்போறறசசகலகாரணமதாகுந
தருமமேயழியாதெனறுந்தாபரமாகிநிறகுந
தருமமேதனைவேட்டோர்கருச்சவுககியமனைததுநல்குந
தருமமேமுததிசேருஞ்சாதனமென்றுட்கொள்வான். (2)

88 ஈங்கியற்றறததினாலேயெய்திடுஞ்சித்தசுததி
யாங்கதுமேவின்யோகமாமதனாலின்பாகும
பாஙகுசேரிதனைத்தோராபபாதகர்பொருளையீட்டி
நீங்குவர்வறிதேயெல்லாநிரயததுங்குளிப்பவென்றான். (3)

89 எண்ணாருந்தருமவாஞசையெய்தினோர்சாந்தமேவிக்
கண்ணாருஞ்சுததிபெற்றுக்கதிக்கரசாகிவாழ்வார்
பண்ணாரும்பொருளில்வாஞசைப்பட்டவரளவாபபாவ
நண்ணருங்குணமாககொண்டுநரகெலாந்துளையாநிற்பர். (4)

சிவதருமோத்தரம்

90 *பாம்பழல்வாயினுறபற்றமண்டுகந்
தேம்பிடுந்துயருறுஞ்சீவன்றேயுநா
ளோம்பிடவல்லரேயுற்றமற்றையார்
போமபொழுதருந்துணைபுரிந்தபுண்ணியம். (1)

பிரபுலிங்கலீலை.

91 எய்தற்கரியயாக்கைதனக்கெய்திற்றென்றாலதுகொண்டு, செய்தற்கரியவறங்களபலசெய்துதுயர்கூர்பிறவியினின், உய்தற்கொருமைபெறவெண்ணாதுழல்வோனுடம்புபொற நலததிற், பெய்தற்குரியபால்கமரிற்பெய்ததொக்குமென்ப ரால். (1)

92 மின்போலழியுமுடல்கொடுநலவினைசெய்தழியாவுடம்பெய்தி யினபோடமர்தலாயிருபயாக்கைவருந்துமென்றெண்ணி, யன்போடறஞ்செயாதிளையாமலருந்திவாளாவிருக்குமவன் றனைபோன்மருளரிலையென்றான்றண்பூம்பொழில்வைத்தளிக கின்றான். (2)

பிரபோதசந்திரோதயம்.

93 *தருமமாவதுவேயின்பந்தருமலாற்றருமநீக்குங்
கருமமாவதுபோற்றோன்றிககாட்டினுமபசுமட்பாண்டத்
தருமைபாநீரப்புநதெண்ணீரனைத்துமப்பாண்டத்தோடு
மொருமையாக்கெடுதலேபோனறொருகணத்தழியுமன்றே.

இராமாயணம்.

94 முன்புநினறிசைநிறீஇமுடிவுமுற்றிய
பின்புநின்றுறுதியைப்பயக்குமபேரற
மின்பமவந்துறுமெனினினியதாயிடைத்
துன்பம்வந்துறுமெனிற்றுறககலாகுமோ. (1)

சீவகசிந்தாமணி.

95 திருந்தியநல்லறச்செம்பொற்கற்பகம
பொருந்தியபொருளொடுபோகம்பூத்தலால்
வருந்தினுமறத்திறமறததலோம்புமின
கரும்பெனத்திரண்டதோட்காலவேற்கணீர். (1)

**சிலப்பதிகாரம்**

96 நாளைச்செய்குவமறமெனினின்றே
கேள்வினல்லுயிர்நீங்கினுநீங்கு
மிதுவெனவரைந்துவாழுநாளுணர்ந்தோர்
முதுநீருலகின்முழுவதுமில்லை. (1)

**மணிமேகலை**

97 தவத்துறைமாக்கண்மிகப்பெருஞ்செல்வ
ரீற்றிளம்பெண்டிராற்றாப்பாலகர்
முதியோரென்னானிளையோரென்னான்
†கொடுந்தொழிலாளன்கொன்றனன்குவிப்பவிவ்
வழல்வாய்ச்சுடலைதின்னக்கண்டுங்
கழிபெருஞ்செல்வக்கள்ளாட்டயர்ந்து
மிக்கநல்லறம்விரும்பாதுவாழு
மக்களிற்சிறந்தமடவோருண்டோ. (1)

98 *இளமையுநில்லாயாக்கையுநில்லா
வளவியவான்பெருஞ்செல்வமுநில்லா
புத்தேளுலகம்புதல்வருந்தாரார்
மிக்கவறமேவிழுத்துணையாவது. (2)

**வளையாபதி.**

99 *பொருளைப்பொருளாப்பொதிந்தோம்பல்செல்லா
தருளைப்பொருளாவறஞ்செய்தல்வேண்டு
மருளைப்பொருளாவறஞ்செய்துவான்கண்
ணிருளிலியல்பெய்தாததென்னோநமர்காள். (1)

**நாலடியார்.**

100 மற்றறிவாநல்வினையாமிளையமென்னாது
கைத்துண்டாம்போழ்தேகரவாதறஞ்செய்மின்
முற்றியிருந்தகனியொழியத்தீவளியா
னற்காயுதிர்தலுமுண்டு. (1)

† கொடுந்தொழிலாளன் = யமன்.

101 இன்றுகொலன்றுகொலென்றுகொலென்னாது
பின்றையேநின்றதுகூற்றமென்றெண்ணி
யொருவுமின்றீயவையொல்லும்வகையான்
மருவுமின்மாண்டாரறம். (2)

102 என்னைமற்றிவ்வுடம்புபெற்றுமறநினையார்
கொன்னேகழிப்பர்தம்வாழ்நாளை—யன்னோ
வளவிறந்தகாதற்றமாருயிரன்னார்க்
கொளவிழைக்குங்கூற்றமுங்கண்டு. (3)

103 பெருங்கடலாடியசென்றாரொருவகுட
னோசையவிந்தபின்னாடுதுமென்றற்றா
லிற்செய்குறைவினைநீக்கியறவினை
மற்றறிவாமென்றிருப்பார்மாண்பு. (4)

நான்மணிக்கடிகை.

104 *நிலத்துக்கணியென்பநெல்லுங்கரும்புங்
குளத்துக்கணியென்பதாமரைபெண்மை
நலத்துக்கணியென்பநாணந்தனக்கணி
தான்செல்லுலகத்தறம் (1)

அறநெறிச்சாரம்.

105 *தனக்குத்துணையாகித்தன்னைவிளக்கி
யினத்துளிறைமையுஞ்செய்து—மனக்கினிய
போகந்தருதலாற்பொன்னேயறத்துணையோ
டேகமாநண்பொன்றுமில். (1)

106 *ஈட்டியவொண்பொருளுமில்லொழியுஞ்சுற்றத்தார்
†காட்டுவாய்நேரேகலுழ்ந்தொழிவர்—மூட்டு
மெரியினுடம்பொழியுமீர்ங்குன்றநாட
தெரியினறமேதுணை. (2)

† காட்டுவாய்=இடுகாட்டில்.

107 *இன்சொல்விளைநிலமா வீதலேவித்தாக
வன்சொற்களைகட்டுவாய்மையெருவட்டி
யன்புநீர்பாய்ச்சி†யறக்கதிரீனுமோர்
பைங்கூழ்சிறுகாலைச்செய். (3)

108 *காலைசெய்வோமென்றறத்தைக்கடைப்பிடித்துச்
சாலச்செய்வாரேதலைப்படுவார்—மாலை
கிடந்தானெழுதலரிதானமற்றென்கொ
லறங்காலைசெய்யாதவாறு. (4)

109 *சென்றநாளெல்லாஞ்சிறுவிரல்வைத்தெண்ணலா
நின்றநாள்யார்க்குமுணர்வரி—தென்னொருவ
னன்மைபுரியாதுநாளுலப்பவிட்டிருக்கும்
புன்மைபெரிதுபுறம். (5)

110 *இன்றுளாரின்றேயுமாய்வரவருடைமை
யன்றேபிறருடைமையாயிருக்கு—நின்ற
கருமத்தரல்லாதகூற்றின்கீழ்வாழ்வார்
தருமந்தலைசிற்றனன்று. (6)

111 *மின்னுமிளமையுளதாமெனமகிழ்ந்து
பின்னையறிவென்றல்பேதைமை—தன்னைத்
துணித்தானுந்துஞ்சாதறஞ்செய்ககூற்ற
மணித்தாய்வருதலுமுண்டு. (7)

112 *அம்மைத்தாஞ்செய்தவறத்தின்வருபயனை
யிம்மைத்துய்த்தின்புறுநின்றவ—ரும்மைக்
கறஞ்செய்யாதைம்புலனுமாற்றுதனல்லாக்
கறந்துண்டஃதோம்பாமையாம். (8)

† "அறப்பைங்கூழாக்குவாக, கொன்றுமிடும்பை யில" என்பது புறத்திரட்டிற்கண்ட பாடபேதம்.

113 ᵛசெல்வத்தைப்பெற்ருர்சினங்கடிந்துசெவ்வியராய்ப்
பல்கிளையும்வாடாமற்பாத்துண்டு—நல்லவாந
தானமறவாததன்மையரேலஃதென்பார்
வானகததுவைப்பதோர்வைப்பு. (9)

நன்னெறி.

114 கொள்ளுங்கொடுங்கூற்றங்கொல்வான்குறுகுதன்மு
னுள்ளங்கனிந்தறஞ்செய்துய்கவே—வெள்ளம்
வருவதற்குமுன்னரணைகோலிவையார்
பெருகுதற்கண்ணெனசெய்வார்பேசு. (1)

நல்வழி.

115 ᵛஆறிடுமேடுமடுவும்போலாஞ்செல்வ
மாறிடுமேறிடுமாகிலத்தீர்—சோறிடுந்
தண்ணீரும்வாருநதருமமேசார்பாக
வுண்ணீர்மைவீறுமுயர்நது. (1)

திருக்குறள்.

116 சிறப்பீனுஞ்செல்வமுமீனுமறத்தினூஉங்
காக்கமெவனோவுயிர்க்கு. (1)

117 அறததினூஉங்காககமுமில்லையதனை
மறத்தலினூங்கில்லைகேடு. (2)

118 ஒலலும்வகையானறவினையோவாதே
செல்லும்வாயெல்லாஞ்செயல். (3)

119 அனறறிவாமெனளுதறஞ்செய்கமற்றது
பொன்றுங்காற்பொன்றுந்துணை. (4)

120 அறத்தான்வருவதேயின்பமற்றெல்லாம்
புறத்தபுகழுமில. (5)

ஆகச்செய்யுள் 49. அறச்சிறப்பு முற்றிற்று.

### கந்தபுராணம்.

121 துறந்தவர்கள் வேண்டியதொர் துப்புரவுநல்கி
பிறந்தவர்கள் காமுறுமிருங்கடனியற்றி
யறம்பலவுமாற்றிவிருந்தோமபுமுறையல்லாற்
பிறந்தநெறியாலுளதொர்பேருதவியாதோ. (1)

### விநாயகபுராணம்.

122 வருவாய்க்கியையவாழ்தலுறுமறுவில்கறபின்மனையாள்போற்
பொருள்யாவுளவாமதுவன்றிபுகழுமபயனுமிகவுண்டாங்
கருதாரெதிரேயிமிலேற்றுக்காமர்நடையுமுறுமதனு
லொருவாதவளோடொப்புறவேயுறவாழ்தலறனுகும. (1)

### பேரூர்ப்புராணம்.

123 உரம்பெறுபிரமசரிவனத்துறைமேவாருலகனைத்தையுமறநீத
தோர், பரம்பரன்றெனுதுபுலத்தவர்விருநதுபசையுடை
யொக்கன்மன்றுறந்தோ, ராம்புசெயிலமபாட்டினரிறந்தா
ரென்றையிருவரையுநனரேம்பி, வரமபெறுதமைப்பிறுேம
புநரல்லாதவர்மனையறத்தவணிலரே. (1)

124 இத்தகையநால்வாகளின்மூவருக்குமிறந்தார்க்கு
மததமுதலறுர்க்குமாதாரமாதலினு
லுத்தமமாமில்லறமேவாழ்வினுக்குமுயர்கதிக்கும்
வித்துமாந்துறவறத்தினவேருமாமெனும்வேதம். (1)

125 தருமமெனும்பண்டமிடுஞ்சகடமாமனைவாழ்க்கை
கருமறுகம்பினித துமனைக்காதலியுந்தானுமெனு
விருவராய்முறைசெலுததினெத்துணைத்தூரமுஞ்செலனு
மொருவராய்ப்பூண்டிழுபபினேரிலையுஞ்செல்லாதால். (2)

கூர்மபுராணம்.

126 தருமமாற்றனன்னெறியிற்பொருள்களீட்டறம்மொழுக்கின்
மருவுகாமநுய்த்தறம்மூர்வாழ்ததவாழ்தலிகழ்வனகள்
புரிதல்செய்யாதுவப்பனவேபுரிதலுலகத்தொடுமொழுகல்
கருணையொடுமில்லறமபுரிவோர்கடனென்றெவருங்கட்டு
ரைததார். (1)

மாயூரப்புராணம்

127 *தருதுணந்தவிரில்லாளைச்சார்ந்துலகுள்ளோர்யாரு
நகுமுகத்தினரேயாககயந்துவாழ்வதினுஞ்சீவ
னுகுதிறமெதனுமேலனுமுடம்பினையொழுத்தனன்றுஞ்
செகுதிறற்றுன்பமயாவுஞ்சேராதுன்மாணமென்றே. (1)

சிவ–பரமார்த்ததரிசனம்.

128 *துறந்தவர்மூவர்தேவர்துளக்கமிலபிதிராநோய
ரறந்திகழ்விருத்தர்பாலரந்தணர்நல்விருந்தர்
சிறந்ததாய்தந்தைசுற்றந்திருத்தமுறறதறபின்மிக்க
வறந்தருமில்லாளோடுமருக்தனில்லறமதன்றே. † (1)

129 *கொலையொடுகளவுகட்காமங்கோபமென்
புலைகடிந்தைவகைப்புலனுமோம்பின
னிலையினிலனுவழுவழுவினில்லற
மலைவுறாநரகிடையடைக்குமல்லவே. (2)

நன்னெறி.

130 காதனமனையாளுங்காதலனுமாறினறித
தீதிலொருகருமஞ்செய்பவே—யோதுகலை
யெண்ணிரண்டுமொன்றுமதியெனமுகத்தாய்நோக்கரூன்
கண்ணிரண்டுமொன்றைறயேகாண். (1)

சிதம்பரமும்மணிக்கோவை.

131 நல்லறநூலகளிற்சொலலறம்பலசில
வில்லறநதுறவறமெனச்சிறந்தனவே

† அன்று, ஏ-அசைகள்.

யங்கிலையிரண்டினுண்முன்னதுகிளப்பிற
நறநறாறுறைபோய்க்கடிமனைக்கிழவ
னறகுணநிறைநதகறபுடைமனைவியோ
டன்புமருளுங்தாங்கியின்சொலின்
விருநதுபுறந்தந்தருநதவர்பபேணி
யைவகைவேள்வியுமாற்றியிவ்வகை
நல்லறநிரப்பிபபல்புகழ்நிறீஇப்
பிறன்மனைநயவான்றன்மனைவாழ்க்கைககு
வரையாநாளின்மகபபேறுகுறித்துப
பெருநலந்துய்ககும்பெறறித்தன்றே. (1)

வளையாபதி.

132 *தாரநல்விதந்தாங்கிததலைநின்மி
னாருநாடுமுவததலொருதலை
வீரவென்றிவிறன்மிகுவிண்ணவர்
சீரினேசதிச்சிறப்பெதிர்கொள்பவே. (1)

நாலடியார்.

133 மழைதிளைக்குமாடமாய்மாண்பமைந்தகாப்பா
யிழைவிளக்குநின்றிமைப்பினென்னும்—விழைதக்க
மாண்டமனையாளையில்லாதானில்லகங்
காண்டற்கரியதோர்காடு. (1)

நான்மணிக்கடிகை.

134 *கல்லாவொருவர்கருத்தமவாயிறசொற்கூற்ற
மெல்லிலைவாழைக்குத்தானீன்றகாய்கூற்ற
மல்லவைசெய்வார்க்கறங்கூற்றங்கூறறமே
யில்லத்துத்தீங்கொழுகுவாள். (1)

135 மழையின்றிமாநிலததார்ககில்லைமழையுந்
தவமிலாரில்வழியில்லைதவமு
மரசியலில்வழியில்லையரசனு
மில்வாழ்வானில்வழியில். (2)

136 *எண்ணுகருஞ்சான்றோர்மரீஇயாரிற்றீராமை
புண்ணுக்கும்போறறாருடனுறைவு—பண்ணிய
யாழொக்குநட்டார்கழறுஞ்சொல்பாழொக்கும
பண்புடையாளில்லாமனை. (3)

அறநெறிச்சாரம்.

137 பிச்சையுமையமுமிட்டுபபிறன்றாரா
நிச்சலுநோக்காதுபொய்யொரீஇ—நிச்சலுங்
கொல்லாமைகாதறுக்கொடுததுண்டுவாழ்வதே
யில்வாழ்ககையென்னுமியல்பு. (1)

138 விருந்துபுறந்தரான்வேளாண்மைசெய்யான்
பெருந்தக்கவரையுமபேணான்—பிரிந்துபோய்க்
கல்லான்கடுவினைமேற்கொண்டொழுகுமே
லில்வாழ்க்கையென்பதிருள். (2)

139 மருவியகாதன்மனையாளுந்தானு
மிருவரும்பூண்டீர்ப்பினலலா—லொருவரா
லில்வாழ்க்கையென்னுமியல்புடையவான்சகடஞ்
செல்லாதுதெறறிறறுநின்று (3)

140 வினைகாத்துவந்தவிருந்தோம்பிநின்றான்
மனைவாழ்க்கைநன்றுதவத்திற்—புனைகோதை
மெலவியனல்லாளுநல்லள்விருந்தோம்பிச்
சொல்லெதிர்சொல்லாளெனில். (4)

141 *கொணடான்குறிப்பொழுகல்கூறியகாணுடைமை
கண்டதுகண்டுவிழையாமை—விண்டு
வெறுப்பனசெய்யாமைவெஃகாமைநீக்கி
யுறுபபோடுணர்வுடையாள்பெண். (5)

142 *படைப்பதூஉமக்கட்பெறுவதூஉம்பெண்பான்
முடிபபதூஉமெல்லாருஞ்செய்வர்—படைத்ததனை
யிட்டுண்டில்வாழ்ககைபுரிந்துதாநல்லறத்தே
நிற்பாரேபெண்டிரென்பார். (6)

143 *வழிபாடுடையளாய்வாழ்க்கைநடாஅய்
முனியாதுசொல்லிற்றுச்செய்தாங்—கெதிருரையா
தேததிப்பணியுமேவில்லாளையாண்மகன்
போற்றிப்புனையும்பரிந்து. (7)

144 *அட்டுண்டுவாழ்வார்க்கதிதிகளெஞ்ஞான்று
மட்டுண்ணுமாட்சியுடையவ—ரட்டுண்டு
வாழ்வார்கருவாழ்வாரதிதிகளென்றுரைத்தல்
வீழ்வார்க்குவீழ்வார்துணை. (8)

மூதுரை.

145 *இல்லாளகத்திருக்கவில்லாததொன்றில்லை
யில்லாளுமில்லாளேயாமாயி—னில்லாள்
வலிகிடந்தமாற்றமுரைக்குமேலவ்வில
புலிகிடந்ததூறாய்விடும். (1)

திருக்குறள்.

146 அன்புமறனுமுடைத்தாயினில்வாழ்க்கை
பண்புமபயனுமது. (1)

147 அறத்தாற்றினில்வாழ்க்கையாற்றிற்புறத்தாற்றிற்
போஒய்ப்பெறுவதெவன். (2)

148 அறனெனப்பட்டதேயில்வாழ்க்கையஃதும்
பிறன்பழிப்பதில்லாயினன்று. (3)

ஆகச் செய்யுள் 28. இல்லறம் முற்றிற்று.

---

## ௫-அதி. கற்பு.

---

கந்தபுராணம்.

149 காண்டகையதங்கணவரைக்கடவுளார்போல்
வேண்டலுறுகற்பினர்தமெய்யுரையினிற்கு
மீண்டையுளதெய்வதமுமாமுகிலுமென்று
லாண்டகைமையோர்களுமவர்க்குநிகரன்றே. (1)

150 மேனவியல்பான்வரையுமெல்லியலைமேவிற
றூனமுளதாகுமரிதானதவமாகும்
வானமுளதாகுமிவண்மண்ணுமுளதாகு
மூனமிலதாகுமரிதொன்றுமிலையன்றே. (2)

151 காவன்மன்னவனிறந்தனனெனுமுரைகன்னதனுண்
மேவுமெல்லையிலசனியேறுண்டவெமபணியேபோற்
றேவியாகிய†பதுமகோமளையெனுந்திருமங்கை
யாவிநீங்கினடலையளியாகியதனுவன்றோ. (3)

திருக்குற்றலப்புராணம்.

152 சிறுகாலையட்டில்புகலருத்தியுறச்சமைத்தல்சுவைதிருத்தி
யூட்டன், மறுகாலையெண்ணுதுவிருந்தழைத்தன்மகப்பெறு
தன்மடநாணசசம், பெறுகாலையினபுறுதன்முன்னுறங்கப்
பின்னுறங்கல்பின்னெழாத, லுறுகாலைதொழுதெழுதல்பன்
னிரண்டுமெநகர்கறபுடையோர்செய்கை. (1)

திருக்கூவப்புராணம்.

153 மிடியினர்குணமிலர்விருத்தர்நோயினர்
வடிவிலருறுபபிலர்வஞ்சர்மூடர்வெங்
கொடியவராயினுங்கொழுநர்தமமிடை
மடிவிலரன்புகறபுடையமாதரே. (1)

திருக்குடந்தைப்புராணம்.

154 *கொழுநனமுதுண்டதன்பின்றூமுண்பார்குலவுபணி
யொழுகியவன்றுயின்றதன்பின்றூந்துயில்வாருறங்கியவ
னெழுவதன்முனெழுந்திருப்பாரில்லறததிற்குரியவராய்ப்
பழுதகல்கறபுயர்நெறிகொள்பண்புமிகுபாவையரே. (1)

155 *வனைதருபொற்கலனனைத்துமாற்றவளுக்கீதரினுந்
தினையளவுமுனியார்கடனிவழியுஞ்செல்லார்க
ளனையினுமோர்முதுமாதர்துணையன்றியயலகத்து
நினைதரார்புகுதல்செயகீடியகற்புடைமாதர். (2)

† பதுமகோமளை=சூரபதுமன்மனைவி.

156 *ஆயகறைமேற்கிடக்குமமயியின்மேலுலக்கையின்மேற்
பாயவெழினிறைவாயிறபடியின்மேன்மரீஇயமரிற்
றாயதிருவகலுமெனறுணிநதிராரொஞ்ஞான்று
நேயமிகுபெருங்கற்புநிறைந்தகுலமடமாதர். (3)

157 *புறமாகுமுங்காளுநோக்குறூர்புருடன்முக
மறமாகும்விரைந்தென்றோர்மொழியேனும்வசனியா
ரறமாகும்படிபுனலிறறேய்ந்தனையன்முகமபார்ப்பார்
திறமாகுங்கற்புநெறிதிறயபாதசேயிழையாா. (4)

158 *புண்ணியநன்னீராடல்போறறுமொருநோனபுகொள
லெண்ணியநான்முகன்முதலேோரிமையவரைதொழுதேத்த
லண்ணியநாயகனனுவைஞயலலாதுசெயத்துணியார்
கண்ணியவான்பெருங்கறபுக்கடப்பாட்டுக்காரிகையார் (5)

159 *கடவுளாரியனீன்றுன்காமருறப்பெற்றெடுதநா
ளுடனுதிதநார்மற்றுமுளவுறறூர்களெல்லோரு
மடமகனுயகனேயென்றொருப்பாட்டின்வாழ்தருவார்
திடமிகுவண்பெருங்கற்பிறசிறந்துவளர்சேயிழையார். (6)

வாயுசங்கிதை.

160 கணவர்தமமேவல்பூண்டுகறபினிலொழுகிடாதார்
நணுகருங்கொடியவெய்யநரகினுளழுந்துவாராற்
பணிவுறுங்கணவர்தம்மையிழந்துநற்பான்மையின்றி
யணிகலன்றுறந்தமாதர்தன்மையையறைகுவாமே. (1)

161 தரையினிற்கிடத்தருணலகிடறயங்குநீரி
லரியவெண்ணீறறின்மூழ்கலண்ணலைபபூசைசெய்த
லொருபகலுண்டுவைகலட்டமிபதினனகோடு
மருவுபூரணையினுண்டியொழிநதிடல்வழக்கதாமால். (2)

காசிகண்டம்

162 கொழுநனுண்டபின்றுனுகர்கொள்கையும்
விழிதுயின்றபினறுஞ்சலுமென்றுயி
லெழுதன்முன்னமெழுதலுமேயனறே
பழுதில்கற்புடைப்பாவையர்செய்கையே. (1)

163 எரிமணிப்பொலம்பூண்சுமந்தின்னுயிர்க்
குரியகேள்வருவப்பமுனெய்துவார்
பிரியுங்காலையிற்பெய்கலனயாவையு
மொருவிமாசுடலுண் டிடவைகுவார். (2)

164 இனியகேள்வர்முனியினெதிர்நினறு
துனிகொணெஞ்சொடெதிர்மொழிசொல்கிலா
ரனையகேள்வரெறியினுமன்பொடு
கனிவர்நெஞ்சகங்கற்புடைமாதரே. (3)

165 எய்துமிற்றுறந்தேகலரில்லக
மையலார்முகங்காணினுஞ்சாம்புவார்
மையில்காதலர்வந்தெதவையாயினுஞ்
செய்திரென்றலுஞ்செய்தனமென்பரால். (4)

166 விழவுகண்ணுறன்மேதகுநோன்புறல்
பழுதிறுாநதியாடுதல்பண்ணவர்த்
தொழுதுவாழ்த்துதரோமறுகற்பினோர்
கொழுநரேவலினன்றிக்குறிக்கொளார். (5)

167 வனையுந்தங்கலன்மாற்றவட்கியினு
முனிவுசெய்கலர்மூப்பினர்சேர்வுறுத்
தனியிற்சேர்கலர்தாம்பிறரிற்புகார்
புனிதநெஞ்சுடைப்புண்ணியமாதரே. (6)

168 இருந்துமாயுள்சிதையுமென்றெண்ணிததம்
பொருந்துகாதலர்நாமம்புகன்றிடா
ரிருக்தபோதன்றிததாமுனிருந்திடா
ரருந்துமிச்சிலமிழ்கினுகர்வரால். (7)

169 அறந்தவாததமதன்பாருளினற்
றுறந்துளோர்பிறப்போர்தொழில்செய்குநர்
சிறந்ததொல்குலத்தெய்வம்பசுவிருந்
திறந்துளோர்க்கும்பகுத்தினிதுண்பரால். (8)

170 மேவுகாதலருள்ளமகிழ்ந்தன
வேவுமுன்னர்க்குறிப்பினியற்றுவார்
தாவிலன்பர்தமையலர்தூற்றிடும்
பூவையன்னவர்புன்முகநோக்கிலார். (9)

171 இல்லறத்திற்கிசைவனவீட்டுவா
ரல்லசெய்தேவறிதினழித்திடார்
புல்லுகாதலராயுள்பொலிவுற
மல்லலோங்கணிமஞ்சளணிவரால் (10)

172 கொழுநன்சொற்கடவாதுறைகொள்கையே
வழுவினல்லறம்வான்றவமாறுத
றொழுதுதெய்வம்பராய்மலர்தூவுதல்
பழுதில்கற்புடைப்பத்தினிக்கென்பவே. (11)

173 அழகின்வீககஞ்சிறிதலாயினு
†மொழிவினையெய்திரப்புற்றனராயினுங்
கிழவுத்தன்மையராயினுங்கேள்வரைப
பழுதுசொல்கலர்பண்பின்முயங்குவார். (12)

174 அன்பர்துஞ்சிடிற்றுஞ்சுதலாங்கவர்
துன்பமெய்திடிற்றாமுமதுன்புற
வின்பமுற்றிடின்புற்றிருத்தலே
மன்பெருந்தவங்கற்புடைமாதர்க்கே. (13)

175 வாள்விழிக்குலமங்கையரன்பர்பொற்
றாள்விளக்கியதண்புனலகங்கையக்
கேள்வரேகிளர்தேவர்கண்மூவரி
லாளுமெய்ம்மையடிகளெனவெண்ணுவார். (14)

176 ஆன்றகற்பினர்பூப்பினகன்றுறை
மூன்றுநாளுமுகமலர்காட்டலர்
தோன்றயாதுஞ்சொல்லார்புனறோய்ந்தபின்
சான்றகாதலர்தம்முகநோக்குவார். (15)

† ஒழிவினை=தொழுநோயமுதலியன.

177 புனிதமாநதிபபூமபுனலாடுநா
ளினியகாதலர்வேற்றிடமெய்திடி
லனையகேளவரையன்பினமனகொடு
பணிவிசும்பிற்பரிதியைநோககுவார். (16)

178 வசையிலகாதலர்தாய்தந்தைதலைவருழி
†லசதியாடிலான்பரழைத்திடின்
யிசையுநல்லமுதேனும்விடுத்துள
நசையினோடும்பொருகெனநண்ணுவார். (17)

179 தாதைதன்னினுந்தன்னையர்தம்பினு
மாதர்மென்மொழிமைந்தர்கடம்பினுங்
கோதில்கற்புடையார்தங்கொழுநர்பாற்
காதல்கூர்ந்துகளிமகிழ்வெய்துவார். (18)

180 உரவிலம்பியிலோங்குமுலகலைகயிற
பாவும்வாயிறபடியின்முறத்தினிற்
றிருவகன்றிடுமாலெனச்சேர்ந்திரார்
பொருவில்கற்புடைபுண்ணியமாதரே. (19)

181 உரியகேள்வருவந்துபணிந்திடா
தரியநோன்பொடுபூசனையாற்றுவார்
கரியகூற்றுவன்றூதர்கடிந்திட
வெரியுந்தீநரகத்திடையெய்துவார். (20)

182 கடிமணஞ்செயுங்காதலர்தம்பழி
மடமையோடுமொழிபவர்மற்றவ
ருடன்வெகுண்டுரையாடுநரோரியாய்
‡முடுவலாகப்பிறப்பர்முடிவினே. (21)

183 கொழுநர்சீறிற்குறுகிமுன்வைபவ
ருழுவையாகப்பிறபபருருத்துநெஞ்
சழலமாற்றவட்சீறுமறிவிலோர்
கழல்கட்கூகைப்பிறப்பிற்கழிவரால். (22)

---

† அசதி=சிரித்துப்பேசுதல்.
‡ முடுவல்=பெண்நாய்.

184 ஏதிலான்றனெழில்கண்டுவப்பவர்
பேதுசெய்துழல்பேயுருவெய்துவார்
காதலன்பசிக்கக்களித்துண்பவர்
பாதகஞ்செயும்பன்றியிற்றோன்றுவார். (23)

185 மருவுகாதலராருயிர்மாய்ந்திடி
லெரியின்மூழ்கியிறநதுடடுவதற
கருநெறித்தலைவைக்குமரிவையர்
புரவிநன்மகப்பேறுபொருந்துவார். (24)

186 முற்றுசெந்தழன்மூழ்கியகற்பினோர்
புற்றராக்கொடுபுள்ளரசேகல்போ
லெற்றுகாலபடர்கைப்பறித்தினி
துற்றகேள்வரோடும்பரினேகுவார். (25)

187 கொழுநன்பாவியெனினுங்கொழுநனோ
டழலின்மூழ்கினள்கற்புடையாளெனின்
விழியிலன்னவட்காணின்வெங்கூற்றுவ
னுழுவலன்பனைக்கைவிடுத்தோடுமே. (26)

188 வடபுலத்துவயங்குமருந்ததிக்
கடவுட்கற்பினர்காந்திதங்கண்ணுறிற்
படர்சிகைக்கனல்வெங்கதிர்பான்மதி
சுடர்மழுங்கிப்பொலிவிலதோன்றுமால். (27)

189 நீடுகாதலனோடுயிர்நீத்திடும்
வீடில்கற்பினண்மெய்ம்மயிரொன்றினுக்
காடகப்பசும்பொன்னிலத்தாயிரங்
கோடிகாலங்கொழுநனோடின்புறும் (28)

190 கற்புமேயகனங்குழைமாதரைப்
பெற்றுளோர்தமரபுப்பெருந்தவக்
கற்பினுட்கொண்டகாதலனாருயிர்ச்
சுற்றம்யாவுந்துறக்கதினெய்துமால், (29)

1128 ஏதிலார்யாதும்புகலவிறைமகன்
கோதொரீஇக்கொள்கைமுதுக்குறைவு—நேர்நின்று
காக்கைவெளிதென்பாரென்சொலார்தாய்க்கொலை
சால்புடைத்தென்பாருமுண்டு. (6)

இராமாயணம்.

1129 யாரொடும்பகைகொள்ளிலனென்றபின்
போரொடுங்குமபுகழொடுங்காதுதன்
தாரொடுங்கல்செல்லாததுதம்பின்
வேரொடுங்கெடல்வேண்டலுண்டாகுமோ. (1)

1130 கோளுமைம்பொறியுங்குறையப்பொரு
ளாளுங்கண்டுநடுகத்துறநோன்மையி
னாளுமவ்வரசேயரசன்னது
வாளின்மேலவருமாதவமைந்தனே. (2)

1131 உமைக்குநாதற்குமோங்குபுள்ளூர்திக்கு
மிமைப்பினாட்டமோரெட்டுடையானுக்குஞ்
சமைத்ததோள்வலிதாங்கினராயினு
மமைச்சர்சொல்வழியாற்றுதலாற்றலே. (3)

1132 வையமன்னுயிராகவமன்னுயி
ருய்யத்தாங்குமுடலன்னமன்னனுக்
கையமின்றியறங்கடவாதருள்
மெய்யினின்றபின்வேள்வியும்வேண்டுமோ. (4)

1133 இனியசொல்லினனீகையனெண்ணினன்
வினையன்றூயன்விழுமியன்வென்றிய
னினையுநீதிநெறிகடவானெனி
லனையமன்னற்கழிவுமுண்டாங்கொலோ. (5)

1134 சீலமல்லனநீக்கிச்செம்பொறையுலைத்
தாலமன்னதனிநிலைதாங்கிய
ஞாலமன்னற்குநல்லவர்நோக்கிய
காலமல்லதுகண்ணுறுமுண்டாகுமோ. (6)

1135 ஓர்வினல்வினையூற்றத்தினாருரை
பேர்விறொல்விதிபெற்றுளதென்றரோ
தீர்விலன்புசெலுத்தவிற்செவ்வியோ
ரார்வமன்னவற்காயுதமாவதே. (7)

1136 நன்றியீதென்றுகொண்டநயத்தினைநயந்துவேறு
வென்றியேயாகமற்றோதோற்றுயிர்விடுதலாக
வொன்றிலேகிற்றல்போலாமுத்தமாக்குரியதொல்கிப்
பின்றுமேலவனுக்கன்றோபழியொடுநரகம்பின்னை. (8)

வில்லிபாரதம்.

1137 தேறலார்தமைத்தேறலுந்தேறினர்த்தேறலாமையுமென்று
மாறலாருடன்மலைதலுமாறுடன்மருவிவாழ்தலுமுன்னே
யாறலாதனவரசருக்கென்றுகொண்டரசநீதியிறசொன்னார்
கூறலாதனசொல்வதென்செல்வதென்கொடியவனருகென்
றான். (1)

1138 துன்றுபிணியோர்துறந்தோரடங்காதோர்
கன்றுசினமனத்தோர்கல்லாதவரிளையோ
ரொன்றுமுறைமையுணராதவர்மகளி
ரென்றுமிவர்மந்தணத்தினெய்தப்பெறாதாரே. (2)

1139 மறைகெழுநூலுநதேசுமாசிலாத்தவமுஞான
முறைவருமுணர்வுமல்லான்முனிவரர்கருறுதியுண்டோ
துறைகெழுகலைகள்வலலாய்துன்னலர்ச்செகுக்கும்போரு
நிறைதருவலியுமவாழ்வுநிருபர்தம்மியற்கையன்றோ. (3)

1140 மூத்தவரிளையோர்வேதமுனிவரர்பிணியின்மிக்கோர்
தோததிரமொழிவோர்மாதர்தூதரெனறிவரைக்கொல்லிற்
பார்த்திபர்தமக்குவேறுபாவமற்றிதனினில்லை
பூத்தெரிதொடையாய்பினனுநரகினும்புகுவரென்றான். (4)

நளவெண்பா.

1141 வேலைகரையிழந்தாலவேதநெறிபிறழ்ந்தால்
ஞாலமுழுதுநடுவிழந்தால—சீல

மொழிவரோசெமமையுரைதிறம்பாச்செய்கை
யழிவரோசெங்கோலவர். (1)

1142 மன்னராய்மன்னர்தமையடைந்துவாழ்வெய்தி
யின்னமுதந்தேக்கியிருபபாரேற்—சொன்ன
பெரும்பேடிகளலரேற்பிததரேயன்றே
வரும்பேடைமானேயவர். (2)

புறநானூறு.

1143 கடுஞ்சினத்தகொல்களிறுங்
கதழ்பரியகலிமாவு
நெடுங்கொடியநிமிர்தேரு
நெஞ்சுடையபுகனமறவருமென
நான்குடன்மாண்டதாயினுமாண்ட
வறநெறிமுதற்றேயரசின்கொற்ற
மதனால்—நமரெனக்கோல்கோடாது
பிறரெனககுணங்கொலலாது
ஞாயிற்றன்னவெந்திறலாண்மையுந
திங்களன்னதண்பெருஞ்சாயலும்
வானத்தனனவணமையுமூன்று
முடையையாகியில்லோர்கையற
நீ, நீடுவாழிய. (1)

1144 நெல்லுமுயிரன்றேநீருமுயிரன்றே
மன்னனுயிர்த்தேமலர்தலையுலகம்
அதனால—யானுயிரென்பதறிகை
வேன்மிகுதானைவேந்தற்குக்கடனே. (2)

1145 *காய்நெல்லறுத்துககவளங்கொளினே
மாநிறைவில்லதுமபன்னாட்காகு
நூறுசெறுவாயினுந்தமித்துப்புக்குணினே
வாய்புகுவதனினுங்கால்பெரிதுகெடுக்கு

மறிவுடைவேந்தனெறியறிந்துகொளினே
கோடியாததுநாடுபெரிதுநந்து
மெல்லியன்கிழவனாகிவைகலும்
வரிசையறியாக்கல்லெனசுற்றமொடு
பரிவுதபவெடுக்கும்பிண்டநசைஇன்
யானைபுக்கபுலம்போலத்
தானுமுண்ணானுலகமுங்கெடுமே. (3)

1146 *கால்பார்கோதத †ஞாலத்தியக்குங்
காவற்சாகாடுகைப்போன் மாணி
னூறின்றாகியாறினிதுபடுமே
யுய்த்தறேற்றறியனாயின்வைகலும
பகைக்கூழள்ளற்பட்டு
மிகப்பஃறீநோய்தலைத்தலைத்தருமே. (4)

சூளாமணி.

1147 மாலமர்நெடுங்கடன்மதலைமாசிலாக்
காலமைந்தொழுகுமேற்கரையுங்காணுமே
நூலவர்நுழைவொடுநுழைந்துசெல்லுமேல்
வேலவரொழுககமும்வேலைகாணுமே. (1)

1148 மண்ணியவளாகங்காக்குமன்னவர்வணககலாகாப்
புண்ணியரீரரேனும்புலவராற்புகலப்பட்ட
நுண்ணியநூலினன்றிநுழைபொருளுணர்தறேற்றா
ரெண்ணியதுணிந்துசெய்யுஞ்சூழ்ச்சியுமில்லையன்றே. (2)

1149 மறந்தலைமயங்கிவையத்தொருவரையொருவர்வாட்ட
விறந்தலையுறாமைநோக்கியின்னுயிர்போலக்காக்கு
மறந்தலைநின்றவேந்தரடிநிழலன்றியார்க்குஞ்
சிறந்ததொன்றில்லைகண்டாய்திருமணிதிகழும்பூணோய். (3)

1150 நிறந்தலைமயங்கவெம்பிநெடுங்கடல்சுடுவதாயி
னிறந்தலைபெருகுநீர்வாழுயிர்க்கிடரெல்லையுண்டோ

† ஞாலத்தியங்குமென்றும்பாடம்.

மறநதலைமயங்குசெவ்வேன்மன்னவன்வெய்யனுயி
னறந்தலைமயங்கிவையமருமபடருழக்குமன்றே. (4)

1151 மந்திரக்கிழவர்கண்ணுமக்கடன்றூள்களாகச்
சுநதரவயிரத்திண்டோடோழராசசெவிகளொற்று
வநதரவுணர்வுநூலாவரசெனுமுருவுகொண்ட
வெந்திரமிதற்குவாயாததூதுவரியற்றப்பட்டார். (5)

1152 பெற்றதன்முதலாப்பின்பெறுதகுஞ்
சுற்றிவந்தடையுமபடிசூழ்ந்துசென்
றுற்றவான்பொருள்காத்துயரீகையுங்
கற்றவன்பிறர்காவலனுகுவான். (6)

1153 பகை
நகையிறீமனத்தாரைநண்பெண்ணலு
முகையின்வேய்நதமென்மொய்ம்மலர்க்கண்ணியாய்
மிகையினமற்றவைபின்னைவெதுப்புமே. (7)

யசோதரகாவியம்.

1154 *மறவியினமயங்கிவையத்துயிர்களைவருத்தல்செய்யா
தறவியன்மனத்தையாகியாருயிர்க்கருள்பரபபிச்
சிறையனபிறவிபோக்குநதிருவறமருவிச்சென்று
நிறைபுகழுலகங்காத்துநீடுவாழ்கென்றுநின்றூர். (1)

சீவகசிந்தாமணி.

1155 உறங்குமாயினுமன்னவன்றன்னொளி
கறங்குதெண்டிரைவையகங்காக்குமா
விறங்குகண்ணிமையாவிழித்தேயிருந
தறங்கள்வெளவவதன்புறங்காக்கலார். (1)

.156 கோணிலைதிரிந்துநாழிகுறைபடப்பகல்கண்மிஞ்சி
நீணிலமாரியின்றிவிளைவஃகிப்பசியுநீடிப்
பூண்முலைமகளிர்பொற்பிற்கற்பழிந்தறங்கண்மாறி
யாணையிவ்வுலகுகேடாமரசுகோல்கோடினென்றான். (2)

1157 நீதியாலறுத்தநிதியீட்டுத
லாதியாயவரும்பகைகாட்டுதன்
மோதிமுள்ளொடுமுட்பகைகண்டிடல்
பேதுசெய்துபிளந்திடல்பெட்டதே. (3)

1158 ஒற்றர்தங்களையொற்றரினாய்தலுங்
கற்றமாந்தரைக்கண்ணெனக்கோடலுஞ்
சுற்றஞ்சூழ்ந்துபெருக்கலுஞ்சூதரோ
கொற்றங்கொள்குறிக்கொற்றவற்கென்பவே. (4)

1159 இடத்தொடுபொழுதுநாடியெவ்வினைக்கண்ணுமஞ்சார்
மடப்படலின்றிசசூழுமதிவல்லார்க்கரியதுண்டோ
தடத்திடைக்காககையொன்றேயாயிரங்கோடிகூகை
யிடத்திடையழுங்கச்சென்றாங்கின்னுயிர்செகுத்ததன்றே. (5)

1160 வீறின்மைபினவிலங்காமெனமதவேழமுமெறியா
னேறுண்டவர்நிகராயினும்பிறர்மிசசிலென்றெறியான
மாறன்மையின்மறம்வாடுமென்றிளையாரையுமெறியா
னாறன்மையின்முதியாரையுமெறியானயிலுழவன். (6)

மணிமேகலை.

1161 கோணிலைதிரிந்திடிற்கோணிலைதிரியுங்
கோணிலைதிரிந்திடின்மாரிவறங்கூரு
மாரிவறங்கூரின்மன்னுயிரில்லை
மன்னுயிரெல்லாமண்ணாள்வேந்தன்
றன்னுயிரென்னுந்தகுதியின்றாகும். (1)

நாரதசரிதை.

1162 வல்லென்றசொல்லும்புகழ்வாய்மைவழீஇயசொல்லு
மில்லென்றசொல்லுமிலனாகலின்யாவர்மாட்டுஞ்
சொல்லுந்துறையின்மையிற்சோருமின்மையாலே
கொல்லென்றசொல்லுமுரைகற்றிலன்கொற்றவேலான். (1)

### திரிகடுகம்.

1163 கோலஞ்சிவாழுங்குடியுங்குடிதழீஇ
யாலம்வீழ்போலுமமைச்சனும்—வேலின்
கடைமணிபோற்றிண்ணியான்காப்புமிம்மூன்றும்
படைவேந்தன்பற்றுவிடல். (1)

### திருக்குறள்.

1164 படைகுடிகூழமைச்சுநட்பரணாறு
முடையானரசருளேறு. (1)

1165 அஞ்சாமையீகையறிவூக்கமிந்நான்கு
மெஞ்சாமைவேந்தற்கியல்பு. (2)

1166 தூங்காமைகல்விதுணிவுடைமையிம்மூன்று
நீங்காநிலனாள்பவற்கு. (3)

1167 காட்சிகெளியன்கடுஞ்சொல்லனல்லனேன்
மீககூறுமன்னனிலம். (4)

1168 முறைசெய்துகாப்பாற்றுமன்னவன்மக்கட்
கிறையென்றுவைக்கப்படும். (5)

1169 செவிகைப்பச்சொற்பொறுக்கும்பண்புடைவேந்தன்
கவிகைக்கீழ்த்தங்குமுலகு. (6)

ஆகச் செய்யுள் 100, அரசு முற்றிற்று

---

## ௩௰-அதி. அமைச்சு.

---

### கந்தபுராணம்.

1170 மன்னவர்செவியழன்மடுத்ததாமென
நன்னெறிதருவதோர்நடுவுநீதியைச்
சொன்னவரமைச்சர்கடுணைவர்மேலையோ
ரொன்னலர்விழைந்தவாறுரைக்கின்றார்களே. (1)

திருவிளையாடற்புராணம்,

1171 மந்திரக்கிழமைபூண்டுமன்னவர்கருமஞ்செய்வ
தந்தணர்க்கறனேயல்லவமைச்சியலறத்துநின்றால்
வெந்திறலரசர்க்கேற்றசெய்வதேவேண்டுமென்னத்
தந்திரமநுநூல்வல்லோர்சாற்றுவாரன்றோவையா. (1)

1172 நல்லாவின்பாலினறுந்தேன்கலந்தென்னப்பன்னூல்
வல்லாருமாகிமதிநுட்பருமாகிச்சோர்வில்
சொல்லாலடையார்மனமுமுங்களிதூங்கச்சொல்லிப்
பல்லார்பிறர்சொற்பயனாய்ந்துகவரவல்லார். (2)

1173 பழையமிறையுட்கொளப்பட்டமென்றேமாப்பெய்தா
ருழையேவல்செய்யுஞ்சிறார்போலவொழுங்கிவேந்தன்
விழைவேததனைவிடம்போலவெறுத்துவெஃகா
ரழல்போலணுகாரகலார்நிழலன்னநீரார். (3)

1174 மறுகுஞ்செயனீத்துநடக்கையின்வையத்தோரை
யொறுக்கும்பொருளும்பணிகேட்கையினானலாரைச்
செறுக்கும்பொருளுங்கவராரவிளைசெல்வமாக்க
ளிறுக்கும்பொருளேயிறைவற்கிவரீட்டுஞ்செலவம. (4)

1175 மறத்தானவேலான்மனக்கொள்கைதன்னெஞ்சுள்வான
நிறத்தாடிநீழலெனத்தோறறநிறுத்துமற்ற
தறத்தாறெனிலாற்றுவரன்றெனிலாக்கமாவி
யிறத்தான்வரினுமனத்தானுமிழைக்கவெண்ணார். (5)

விநாயகபுராணம்,

1176 நனிபயன்பயப்பச்சிறுமுயற்சியினலத்த நவினையுமற்றனை
ய, வினையினைத்தொடங்குங்காலதுதனக்குவேண்டியபொரு
ள்களும்படையு,மினிதுறுபொழுதுமுபாயமுஞ்செயலுமி
டைப்படுமூறுகணீக்கித், துனிவறமுடிவுபோக்கிடுமாறுஞ்
சூழ்தரவல்லவனமைச்சன். (1)

1177 மிகைவினை வரினுமசைவுறலன்கண் விழுக்குடிகாத்தலான்
வினைமுதல், வகையுறச்சூழ்ந்துவிடுமெனவிடுத்துவகுப்பனவ
குத்திடல்வேண்டிற், பகைவர்தன்றுணையைப்பிரித்தறம்மிட
த்துப்பயின்றவர்பகைவர்பாற்புகாமற், றகையுறச்செய்தல்
பிரிந்தவர்தம்மைத்தம்மொடுபொருந்தலுமமைச்சாம். (2)

1178 அறிவதுஞ்செயலுமொழிவதுமரசர்க்காக்கமேகுறித்தனவா
குந், திறனுநன்றறியாவரசருக்குறுதிசெபலுஞ்செய்வன
வேனு, முறுமுலகியற்கைக்கொத்திடிற்செயலுமொருவினைக்
கியைந்தபலசெயலு, நிறுவுவதொன்றலவாய்ப்பவெஞ்ஞா
னறுநிகழ்த்தலுமமைச்சருக்கியல்பாம. (3)

1179 முறையுறச்சூழுமாத்திரமன்றிமுடிக்கமாட்டாதமந்திரியு
மிறைவனுக்கிதமெனனுமந்திரியுமெழுதுசித்திரத்தினுமா
கா, வுறுவரிற்பிரிக்கப்பட்டவர்முதலோருளத்தினைப்பிணித்
துறுருளமு, மறுவறப்பிணிக்குமொழித்திறனறிந்துவழக்கன்
மந்திரிகணற்குணமே. (4)

1180 சுருக்கிமெய்விளக்கியினிமையும்பயனுந்தொகுத்தயலார்
மொழிக்கிடையாத, திருக்கிளர்மொழியைச்சோர்வறவவைக
கட்செல்லுமாறஞ்சுதலின்றி, யுரைக்கவல்லவரேயமைச்சாக
ளாவருறமுறைபிறழ்தரப்பலவாய், விரிக்கவல்லவருமகற்றது
விளங்கவிரிக்கமாட்டாருமெல்லியரே (5)

1181 பொருள்பயந்திடினுமறமபுகழ்பயவாபபுரைபடுவினையென
றும்புரியார், மருளினமறறொருகாறபுரியினுமிரங்கார்வைய
கத்தேனையோர்போல, விருமுதுகுரவர்கறபுடைமகளிரின
மகவிவர்பசிததிடினும், பெருமிதப்படாதவினைசெயாருலகு
பேணுநர்க்கேமஞ்செயமைச்சா. (6)

1182 துணிவுறுமளவுஞ்சூழ்ந்துபினிராதுசூழ்வினைபொருந்துமா
வாயெல்லாந, தணிவறமுடித்தலதுதகாதாயிறபருபொருள்
வினையிடக்கால, பணியுமுகருவினையாதுமாய்த்திகலையடர்த்த

லொட்டார்ககழிவுறுங்காற், பணிவுசெய்தேனுங்காத்தன்
முத்தொழிலும்பண்புடையமைச்சர்தந்தொழிலே. (7)

ஞானவாசிட்டம்.

1183 *தீயவனுமந்திரியானல்வேந்துந்தீவேநதாந்தீமையில்லாத்
தூயவனுமந்திரியாற்றீவேந்துநல்வேந்தாந்தொடர்ச்சிபோல
வாயநெறிமன்னவராலமைச்சருமப்படியாகுமாதலாலே
நேயவிவேகத்தமைச்சனுண்டாகிலெபயயனுநிருபறகுண்
டாம். (1)

நீதிநெறிவிளக்கம்.

1184 செவிசுடச்சென்றுங்கிடித்தறிவுமூட்டி
வெகுளினும்வாய்வெரீஇப்பேரா—கவிழ்மதத்த
கைம்மரவயத்ததேபாகுமற்றெததிறத்து
மமமாண்பினவேயமைசசு. (1)

இராமாயணம்.

1185 நல்லவுந்தீயவுநாடிநாயகற்
கெல்லையின்மருத்துவரியலபினெண்ணுவ
ரொல்லைவந்துறுவனவுற்றபெற்றியிற்
றெல்லைநல்வினையெனவுதவுஞ்சூழ்ச்சியார். (1)

1186 தம்முயிர்க்குறுதியெண்ணார்தலைமகன்வெகுண்டபோதும்
வெம்மையைததாங்கிநீதிவிடாதுநின்றுரைக்குமெய்யர்
செம்மையிற்றிறமபல்செல்லாத்தேற்றத்தார்தெரியுங்கால
மும்மையுமுணரவலலாரொருமையேமொழியுநீரார். (2)

சூளாமணி.

1187 அந்தணரொழுககமுமரசர்வாழ்க்கையு
மந்திரமில்லையேனமலருமாண்பில
விந்திரனிறைமையுமீரைஞ்ஞூற்றுவா
தந்திரக்கிழவர்கடாங்கச்செல்லுமே. (1)

1188 சுறறுநின்றெரியுஞ்செமபொன்மணிமுடிசுடரச்சூட்டி
வெற்றுவெண்குடையினீழல்வேந்தன்வீற்றிருக்குமேனு

மற்றவனமனமுங்கண்ணும்வாழ்க்கையும்வலியுஞ்சால்பு
மற்றமிலரசுங்கோனுமாபவரமைச்சரனறே. (2)

1189 செறிந்தவர்தெளிந்தநூலார்சிறந்தவைதெரிந்துசொன்னு
லறிந்தவையமர்ந்துசெய்யுமமைதியானரசனுவான்
செறிந்தவர்தெளிந்தநூலார்சிறந்தவைதெரிந்துகூறி
யறிந்தவையியற்றகிற்குமமைதியாரமைச்சராவார். (3)

1190 ஆற்றலென்றேதப்பட்டவரசர்கட்கவற்றின்மிக்க
வாற்றறுஞ்சூழ்ச்சியென்பதாதலாலதனையாயு
மாற்றலாரமைச்சராகவமைசசரோடமர்ந்துசெல்லு
மாற்றலானரசனுக்கினரியதொன்றில்லையன்றே. (4)

1191 தண்ணியதடத்தவேயெனினுந்தாமரை
விண்ணியல்கதிரினல்விரியும்வேந்தரும்
புண்ணியப்பொதும்பரேபுரிந்துவைகினுங்
கண்ணியபுலவராலலர்தல்காண்டுமே. (5)

1192 வால்வளைபரவிமேயும்வளர்திரைவளாகமெல்லாங்
கோலவளைவுறுமற்காகருஙகொற்றவனெடியனேனு
மேல்விளைபழியுமவெய்யவினைகளும்விலககிநின்றார்
நூல்விளைபுலவான்றேறறுணஙகுபோதணங்குதாரீர். (6)

திரிகடுகம்.

1193 ஐயறிவுந்தம்மையடையவொழுகுத
லெய்துவதெய்தாமைமுற்காத்தல்—வைகலு
மாறேற தமுன்னாகிலையறிதலிம்மூன்றும்
வீறுசால்பேரமைச்சர்கோள். (1)

சிறுபஞ்சமூலம்.

1194 தன்னிலையுநதாழாத்தொழினிலையுந்துப்பெதிர்ந்தா
ரின்னிலையுமீடிலியனிலையுந்—துன்னி
யளந்தறிந்துசெய்வானரசமைச்சன்யாதும்
பிளந்தறியும்போாற்றலான். (1)

திருக்குறள்.

1195 கருவியுங்காலமுஞ்செய்கையுஞ்செய்யு
மருவினையுமாண்டதமைச்சு. (1)

1196 வன்கண்குடிகாத்தல்கற்றறிதலாள்வினையோ
டைந்துடன்மாண்டதமைச்சு. (2)

1197 பிரித்தலும்பேணிக்கொளலும்பிரிந்தார்ப்
பொருத்தலும்வல்லதமைச்சு. (3)

1198 தெரிதலுந்தேர்ந்துசெயலுமொருதலையாச்
சொல்லலும்வல்லதமைச்சு. (4)

1199 அறிகொன்றறியானெனினுமுறுதி
யுழையிருந்தான்கூறல்கடன். (5)

1200 பழுதெண்ணுமந்திரியிற்பக்கத்துட்டெவ்வோ
ரெழுபதுகோடியுறும். (6)

ஆகச்செய்யுள் 31, அமைச்சுமுற்றிற்று.

## ௩௧-அதி. அடைந்தோர்ப்புரத்தல்.

கந்தபுராணம்.

1201 ஈங்கிதுவுமன்றியெவரேனுந்தம்மடங்காத்
தீங்குபெறினுதவிசெய்யென்றிரந்திடலு
மாங்கொருவன்செய்யாததுமறுத்துத்தன்னுயிரைத்
தாங்கலுலகநடைதனக்குத்தக்கதுவோ. (1)

1202 எவரெனினுமிடருற்றனராகி
யோவில்குறையொன்றுளரேலதுமுடித்தற்
காவிவிடினுமறனேமறுததுளரேற்
பாவமலதுபழியுமொழியாதே. (2)

### தணிகைப்புராணம்.

1203 பேதைமைப்பாலினாதல்பெருங்கிழமையினாதன்
மேதகநட்டோர்மாட்டுவிரவிடும்பிழைகளெல்லாங்
காதுதற்பாலவல்லகாதிடிற்கண்ணினோடி
நோதகவோச்சிமெல்லநோன்றவேயெறிகுவாரால். (1)

### சேதுபுராணம்.

1204 பனவக்கொலைமுன்பாதகங்கள்பாற்றற்குளதுபரிகாரந்
தனைநம்பினரைவதைத்தபவஞ்சாய்த்துரக்குந்தவமில்லை
கனகவரையும்பெரிதன்றுகருதுங்காலைகாதலினான்
மனநண்புடையாருயிர்கவரும்வஞ்சம்பெரிதாமென்றிடலும்.

### நீதிநெறிவிளக்கம்,

1205 கலைகணுத்தம்மடைந்தார்க்குற்றுழியுமற்றோர்
விளைவுன்னிவேறுடம்புதாங்கார்—தளர்நடைய
தானுடம்பென்றுபுகழுடம்போம்புதற்கே
தானுடம்பட்டார்கடாம். (1)

### இராமாயணம்.

1206 பேரபிமானங்களுற்றபெற்றியோர்
போரிடைப்புறங்கொடுத்தஞ்சிப்போந்தவர்
நேர்வருதாயத்துநிரப்பினோர்பிறர்
சீரியர்கிளைஞரைமடியச்செற்றுளோர். (1)

1207 அடுத்தநாட்டரசியல்புடையவாணையாற்
படுத்தவர்பட்டவர்பகைஞரோடொரு
மடக்கொடிபயந்தவர்மைந்தராயினு
முடற்கொளத்தகையர்நம்முழைவந்தொன்றினால். (2)

1208 இன்றுவந்தானென்றுண்டோவெந்தையையாயைமுன்னங்
கொன்றுவந்தானென்றுண்டோவடைக்கலங்கூறுகின்றான்
றன்றிவந்தன்புசெய்யுந்துணைவனுமவனேபின்னைப்
பின்றுமென்றாலுநம்பாற்புகழன்றிப்பிறிதுண்டாமோ. (3)

1209 பிறந்தநாட்டொடங்கியாருநதுலைபுக்கபெரியோன்பெற்றி
மறநதநாளுண்டோவென்னைசசரணெனவாழ்கினறனை த
துறநதநாட்கின்புவநதுதன்னிருன சூழ்ச்சியாலே
பிறநதநாளன்றேவென் றமிருந்தநாளாவதென்றான். (4)

1210 இடைநதவர்க்கபயம்யாமென்றிரந்தவர்க்கெறிநீர்வேலை
கடைநதவர்கநாகியாலமுணடவநகண்டிவீரோ
வுடைநதவாகருதவாறுகிலுளதொனறியாறுகி
னடைந்தவாககருளாறு நினறமென்றுமாணமையென்றும. ()

1211 நஞ்சினைமிடறறுவைத்தநகைமழுவாளறுஞந
தஞ்செனமுனனந்தானேதாதைபாறகொடுததுச்சாத
லஞ்சினேனபயமென்றவநதணறகாகியநநாள்
வெஞ்சினககூற்றைவெனறமேனமைபின்மேன்மையுண்டோ

பெருந்தேவனார்பாரதம்.

1212 ஒனறுநாமபெனகோவொன்றுதவெனபெனகோ
வினறசைதானெனகோயாதென்கோ—மென்றொடையாழப்
பண்ணேறுட்டுமினசொறபணைததோளாய்சேர்ந்தவாபாற
கண்ணோட்டமில்லாதகண். (1)

ஆகச்செய்யுள் 12, அடைந்தார்ப்புரத்தல்முற்றிற்று.

# கூஉ-அதி. மன்னரைச்சேர்ந்தொழுகல்.

விநாயகபுராணம்.

1213 ஆறுமாசன்பாலன்புமவனுக்காவகறியறிவு
நாறுமவறறைக்கலங்காமனனகுமுடிக்குமுளத்துணிவு[யாத
மூறுமவினைக்குத்தன்காரததின்மொய்த்தபொருளின்விழை
வேகாறுமுடையான்புரிவினையிற்குற்றமுறுதுகுணமேயாம்.(1)

1214 குடிப்பிறந்திருநூல்கற்றறிந்தமைச்சர்குணங்களுமுடைய
னாய்ச்சுற்றங், கட்படுமரசனிடத்துறமனபுங்கருதுவேற்றர
சவாமபண்பும, விடபபடாவின்சொலவன்மையுமுருவும்வெரு
வுறுத்திண்மையுமருவி, யிடத்தொடுசெவ்வியறிந்துகாலத்துக
கேற்றவுமுரைபபவன்றூதன். (2)

1215 உறுபொருள்காமமவிருமபுறுத்தூய்மையுயிர்க்கழிவுறினும
ஞ்சாமை, மறுபுலததமைச்சர்துணைமையாநதன்மைவாய்மை
சொற்சோர்வுறுததுணிவு, மறுவறவுடையனாய்வழியுரைப்
பானமததிமததூதனாமுடங்கல், குறுகுபுகொடுப்பானகடை
ப்படுநதூதனகூறியவிவரையுநதழீஇக்கொள். (3)

1216 இறைசிறபபாகவணிவனநுகர்வவினிதுறுமேன்மையாதிக
டா,முறலறைபோதலுரிமையினமருவலொண்பொருள்வெள
வன்மன்னவன்முன், பிறர்செவிமொழிதல்பிறரொடுநகைத்த
ல்பேணுறுபபண்புவேந்திளமை, முறைமதித்திகழ்தல்விரும்
புறுவினையைமுடித்தலுஞ்சேர்ந்தவர்ககாகா. (4)

1217 குறிபபொடுகாலமறிந்திறைவிரும்பககோதறுபயன்மிகப்பயக்
கும, வெறுபபிலவினையைவிளமபிவேண்டாதவினையினைக்
கேட்பினும்விளம்பார், சிறபபுறவோர்வதாயினுமறைதான்
செப்பிடிறகேட்பினலலாது, மறப்பினுந்தொடாரோர்தா
ரணுகார்மருங்ககலார்வினைவலிததார். (5)

1218 அகத்திடைகருதிததகாரியமதனையயுறுதவரவர்விழியான்,
முகத்திலைறியவல்லவனாகிமுகம்விழியிரண்டினுமன்றி, யக
த்திடைத்தனக்குநிகழ்நதிடுங்குறிப்பாலவரவாகக்குறிப்பறி
ந்து, மிகத்தெளிபவனைக்கரிமுதலுறுப்புள்விழைவனகொடுத்
துங்கொண்மைந்தா. (6)

1219 தொகைபடுசெஞ்சொலிலக்கணச்சொல்லேசூழ்ந்திடுங்குறிப்
புச்சொன்மூன்றின், வகையறிநதுயர்ந்தோரொத்தவர்தாழ்ந்
தோர்மருவுமூன்றவையுமாராய்ந்து, தகையுறவுயர்ந்தோர
வையின்முந்துரையார்சமத்தினெவ்வாற்றினுங்கிளப்பார்,

நகைபடுதாழ்வினைனறையுமொழியார்நவைபடாச்சொற்பொருளாய்ந்தோர். (7)

1220 வல்லவரவையுட்கற்றதஞ்சாதுவகுத்துரைத்தவருண்மிககான, நல்லவைகேட்பார்கற்றவர் தம்முணனகுறமதித்திடப்படுவார், சொல்லவையஞ்சிக்கற்றனசெலுத்தாச்சோர்வினர்கற்றுங்கல்லாத, புல்லியரிருந்தும்பொன்றினரதனாற்போற்றுகவவையஞ்சாதவரை. (8)

சோமேசர்முதுமொழிவெண்பா.

1221 மாமனுமென்னுமதத்தானைையிகழ்ந்து
தொழுற்றார்தக்கனர்சோமேசா—வாமே
பழையமெனக்கருதிப்பண்பல்லசெய்யுங்
கெழுதகைமைகேடுதரும். (1)

1222 இகழினிகழ்ந்தாங்கிறைமகனென்று
புகழினுமொக்கப்புகழ்ப—விகன்மன்னன்
சீர்வழிபபட்டதேமனபதைமற்றென்செய்யு
பபட்டபுணை. (1)

1223 கைவரும்வேந்தனமக்கென்றுகாதலித்த
செவ்விதெரியாதுரையற்க—வொவவொருகா
லெண்மையனேனுமரியனபெரிதமமா
கண்ணிலனுள்வெயர்ப்பினன். (2)

1224 பழைமைகடைப்பிடியார்சேணமையும்பாரார்
கிழமைபிறிதொன்றுங்கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மையுண்டேயிறைமாண்டார்ககேதிலரு
மார்வலருமில்லையவர்க்கு. (3)

1225 மன்னர்புறங்கடைகாத்துவழிதேயா
மெக்நலங்காண்டுமெனமெள்ளற்க—பனவெனடுநாட

காத்தலைவெல்லாங்கடைமுறைபோய்க்கைகொடுத்து
வேத்தவையின்மிக்குச்செய்யும். (4)

### இராமாயணம்

1226 கற்றதிலாவிறைவனற்மைகருதினுலதனைக்காத்துத்
திருத்தலாமாகினன்றேதிருத்துகதீராதாபிற
பொருத்துறுபொருளுண்டாமோபொருடொழிற்குரியராகி
யொருத்தரின்முன்னஞ்சாதலுண்டவர்க்குரியதம்மா. (1)

### வில்லிபாரதம்.

1227 புன்னவைபானமாற்றம்புகன்றனரெனினுங்கேட்டாங்
கின்னவைநன்றுநன்றென்றிதம்படமொழிவதல்லான்
மன்னவையிருந்துநாளுமவழிபடுமாந்தர்மன்னர்
சொன்னவைமறுத்துமாறுசொல்வரோசுருதிவல்லாய். (1)

1228 ஆவதுங்கருமாருகிலமைச்சர்சொற்கேளாருகில
ரீவதுந்தறியாருகிலிளைவதுமுணாருகி
ஞவதுகாவாருகிலவனுக்காநடந்துபோரிற
சாவதுபழுதெனறன்றேசகத்துளோர்சாற்றுகின்றூர். (2)

### தசேலோபாக்கியானம்.

1229 அல்லதுமிருநடப்பெனப்பற்றநோக்காதுசெல்வி
லொல்லையினிக்குண்டாயிற்றுமவமானமெய்யே
நல்லனமனையின்வாசருநறுநெய்யுண்டொளிர்வதேனெ
றெல்லடர்சுடரைமுத்தமிடிற்சுடாதமைவதுண்டோ. (1)

### பெருந்தேவனார்பாரதம்.

1230 தமோற்றமன்னர்த்தகைசான்றசொல்லான
வடமாற்றமவாய்சோராருகி—விடமாற்ற
மெஞ்சாதுகூறியிகலவேந்தன்சீறுங்கா
லஞ்சாதமைவதத்தூது. (1)

1231 படையளவுகூறார்பெரியார்முன்மாற்றார்
படையளவிற்றென்றுவியவார்—கொடைவேந்த
னீத்ததுகண்டின்புறாரேந்திழையார்தோள்சேரார்
பார்த்திபர்தூதாயடைந்தார்பண்பு

1232 தானறிந்துகூறுந்தலைமற்றிடையது
கோனறைந்ததீதென்றுகூறுமாற—றானறியா
தோலையேகாட்டுங்கடையென்றாரூனறு
மேலையோர்தூதுரைத்தவாறு. (3)

1233 அன்புடைமையாய்ந்தவறிவுடைமையிற்பிறப்பு
நன்குடைமைநல்லயனுடைமை—நன்கமைந்த
சுற்றமுடைமைவடிவுடைமைசொல்வன்மை
கற்றடங்காற்றின்கடன். (4)

பழமொழி,

1234 வெஞ்சினமன்னவனவேண்டாதனசெயினு
நெஞ்சத்துட்கொள்வசிறிதுஞ்செயல்வேண்டா
வென்செய்தகப்பட்டக்கண்ணுமெழுப்புபவோ
துஞ்சுபுலியைத்துயில. (1)

1235 தீயனவல்லசெயினுந்திறல்வேந்தர்
காய்வனசெய்தொழுகாகற்றறிந்தார்—காயும
புலிமுன்னாப்புல்வாய்க்குப்போக்கிலதுவே
வலிமுன்னர்வைப்பாருமில. (2)

ஆசாரக்கோவை,

1236 *அறத்தொடுகலயாணமாள்வினைகூரை
யிறப்பப்பெருகியக்கண்ணுந்திறப்பட்டார்
மன்னரினமேம்பட்டசெய்யற்கசெய்பவேன்
மன்னியசெல்வங்கெடும. (1)

திருக்குறள்.

1237 மன்னர்விழைபவிழையாமைமன்னரான்
மன்னியவாக்கந்தரும். (1)

1238 செவிசசொல்லுஞ்சேர்ந்தநகையுமவித்தொழுக
லான்றபெரியாரகதது. (2)

1239 குறிபபறிந்துகாலஙகருதிவெறுபபில
வேண்டுபவேட்பச்செயல். (3)

1240 இளையரினமுறையரென்றிகழார்ர
வொளியோடொழுகப்படும். (4)

1241 கொளப்பட்டேமென்றெண்ணிக்கொள்ளாதசெய்யார்
துளக்கற்றகாட்சியவர். (5)

ஆகச் செய்யுள் 29, மன்னரைச்சேர்ந்தொழுகல்முற்றிற்று.

## ௩௩-அதி. மானம்.

### கந்தபுராணம்.

1242 கூறொடுவெகிரேபங் தகுருடுபேரூமையாரே
ரூனமதடைந்தபுனமையாக்கையோடொழியுமம்மா
மானமதழிந்துதொலைவவியிழந்துலகில்வைகு
மேனையர்வசையின்மாறற்மெமூமையுமகல்வதுண்டோ. (1)

1243 இறந்திடவரினுமல்லாவிடுக்கணொன் றுறினுந்தமபாற்
பிறந்திடுமானநதன்னைவிடுவரோபெரியரானோர்
சிறந்திடுமிரண்டுநாளைச்செல்வத்தைவிரும்பியானுங் [றேன.
துறந்திடேனபிடிததகொள்கைசூரனென்றொருபேர்பெற்

### விநாயகபுராணம்,

1244 பெருக்கத்துயாவாம்பணிவொழியல்பேணுப்பணிவுசுருககத்
திற், செருக்கவின்றியமையாதசிறப்பிற்றேனுமுயர்மான,
முருக்கும்வினையைச்செயநினையன்மொய்ம்பார்மானங்கெட
வாழ்வந, தருக்குமெனிற்சாமரைமானையுன்னலேமகண்
டனே, (1)

1245 இழிந்ததொழிலினாவதேயெய்தற்கரியநாணென்ப [யாங்
றொழிந்தமனவாக்குடலொடுககமொளிவாணுதலார்நாணே
கழிந்துவிடநாண்மண்கோடல்கருதார்நலமெல்லாம்வளர்ப்பா
ரழிந்துநாண்மற்றுயிர்வாழாராவியழிந்துநாணாள்வார். (2)

வில்லிபாரதம்.

1246 ஊனமேயானவூனிடையிருககுமுயிரினைத்துறந்துமொண்பூ
ணா, மானமேபுரபபதவனிமேலெவர்க்குமவரிசையுந்தோற்ற
முமரபு, ஞானமேயானதிருவடிவுடையாய்ஞாலமுள்ளளவு
நிற்றலினா, லீனமேயுயிருக்கியறகையாதலினாலெனறனன்
வீமனுக்கிளையோன். (1)

நாலடியார்.

1247 திருமதுகையாகததிறனிலாசெய்யும்
பெருமிதங்கண்டக்கடைத்து—மெரிமண்டிக
கானந்தலைப்பட்டதீபபோறகனலுமே
மானமுடையார்மனம. (1)

1248 இம்மையுநன்றாமியனெறியுங்கைவிடா
தும்மையுநல்லபயத்தலாற—செம்மையி
னானங்கமழுங்கதுப்பினாய்நன்றேகாண்
மானமுடையார்மதிபபு. (2)

1249 கடமாதொலைச்சியகானுறைவேங்கை
யிடம்வீழ்ந்ததுண்ணாதிறக்கு—மிடமுடைய
வானகங்கையுறினும்வேண்டார்விழுமியோர்
மானமழுங்கவரின். (3)

நான்மணிக்கடிகை.

1250 பறைபடவாழாவசுணமாவுள்ளங்
குறைபடவாழாருரவோர்—நிறைவனத்து
நெற்பட்டகண்ணேவெதிர்சாந்தமகொவ்வாச்
சொற்பட்டாற்சாவதுசால்பு. (1)

### அறநெறிச்சாரம்.

1251 *தனக்குத தகவல்லசெய்தாங்கோராற்று
லுணறகுவிருமபுங்குடரை—வனபபுற
வாமபற்றுள்வாடலேபோலவகததடககித்
தேமபத்தாங்கொள்வதறிவு. (1)

1252 *தானததின்மிக்கதருமமுநதக்கார்கரு
ஞானத்தின்மிக்கவுசாத்துணையு—மான
மழியாவொழுககததின்மிககதூஉமில்லை
பழியாமலவாழுநதிறம (2)

### மூதுரை.

1253 *உற்றவிடததிலுயிர்வழங்குந்தன்மையோர்
பற்றலரைக்கண்டாறபணிவரோ—கற்றூண்
பிளநதிறுவதல்லா றபெரும்பாரந்தாங்கிற்
றளர்நதுவளையுமோதான். (1)

### நல்வழி.

1254 *பிச்சைககுமுதத்குடிவாழ்க்கைபேசுங்கா
லிச்சைபலசொல்லியிடிததுண்கை—சிச்சீ
வயிறுவளர்க்கைக்குமானமழியா
துயிர்விடுகைசாலவுறும்.

### திருக்குறள்.

1255 இன்றியமையாச்சிறபபினவாயினுங்
குனறவருபவிடல. (1)

1256 மருநதோமற்றூனோம்புமவாழ்க்கைபெருந்தகைமை
பீடழியவநதவிடத்து. (2)

1257 மயிர்நீபபினவாழாககவரிமாவனனா
ருயிர்நீப்பர்மானமவரின். (3)

1258 இளிவரின்வாழாதமானமுடையா
ரொளிதொழுதேததுமுலகு. (4)

ஆகச் செய்யுள் 17, மானம்முற்றிற்று.

## ௩௪-அதி. முயற்சி.

1259 ஆக்கமிங்கொருவராலணுகவேண்டுமே
னூக்கமுண்டாவரோவுறுவரன்னது
நீக்கமில்கொள்கையினிற்பரேயெனின்
மேக்குறுபெருந்திருவிரைவினமேவுமால் (1)

1260 நெடிதுபடபகல்செலவினுநிரம்புவதொனறை
யிடைவிடாமலேமுயன்றுபெறற்கென றதியறகை
யுடல்வருந்தியுநதங்களானமுடிவுறுதொனறை
முடியுமீதெனககொளவதுகயவர்தமமுறையே. (2)

### விநாயகபுராணம்.

1261 விடாதுதனுவிறசெயுமுயறசிமென்மேற்பொருளை மிகவளர்க்
கும், கெடாதுசுறறநட்பினர்தஙகிளையுநதாங்குமயாவர்க்குந்
தடாதவுபகாரமுமபுரியுந்தடந்தாமரையாளையுஞ்சேர்க்கும்,
படாதவூழ்வந்திடுகாறுமபயனேவிளைக்குமபழியினறும் (1)

1262 உலையாமுயறசிகளைகணுவூழின்
வலிசிந்துமவனமையுமுண்டே—யுலகறியப
பானமுளைதினறுமறலியுயிர்குடிதத
கானமுளையேபோலுஙகரி (1)

1263 காலமறிந்தாங்கிடமறிந்துசெய்வினையின
மூலமறிந்துவிளைவறிநது—மேலுநதாஞ்
சூழ்வனசூழ்ந்துதுணைமைவலிதெரிந
தாழ்வினையாளப்படும். (2)

1264 மெய்வருத்தம்பாரார்பசிநோக்கார்கண்டுஞ்சா
ரெவ்வெவர்தீமையுமேறகொள்ளார்—செவ்வி

யருமையும்பாராரவமதிபபுங்கொள்ளார்
கருமமேகண்ணாயினார். (3)

குசேலோபாக்கியானம்.

1265 கலைமுழுதோர்ந்துகரிசெலாமறுத்தகாந்தனேபருமணியாவத
தலைகிடந்திமைகருநதாத்திரியதனிற்சாற்றருந்தக்கநன்முய
ற்சி, யுலைவறபபுரியாவொருவனுக்கெங்ஙனுற்றிடுஞ்செல்வ
நன்னிலததை, நிலைபெறவுழுதுவித்திலான்றனக்குநீள்பயனு
ற்றிடுங்கொல்லோ. (1)

1266 மானிடனொருவன்றனக்கருஞ்செல்வமவாய்க்கவென்றனு
தினமுயற்சி, தானுஞற்றுவனேற்கடவுளுமதனைததந்தளிக்கு
வனதாலன்றோ, வானபேரறிஞர்திருவினைமுயற்சியாக்குமம
முயற்சியிலாமை, யினைமாரின்மைபுகுத்திடுமாலென்றியாரு
நன்குணர்தரநவில்வார். (2)

1267 செயத்தகுமுயற்சிசெய்திடிற்செயிர்தீர்செய்யவண்மணாளனு
மிரங்கி, வியததகுவேண்டுமியாவையுமளிப்பன்விளமபுறுமு
யற்சிசெய்யானே, னயத்தகுபோகமளித்திடானென்னுஞானி
லததறிஞர்நன்குரைபப, ருயத்தகுநெறிமாலடியுணலென்றே
யோர்ந்தமாதவப்பெருங்கடலே. (3)

1268 முன்புநல்வினைசெய்தவர்முயற்றின்றிமுன்னியவெலாமுண்ப
ரெனனி, வின்பவாலரியேமுதலுபகரணமெலாமினிதுடைய
வரேனும், வன்புறுமடுதன்முயற்சியில்லாமைவயிற்றெழுபசி
த்தழலவிய, நன்பதமாமோமறைமுழுதுணர்ந்தநற்றவக்குண
ப்பெருங்குன்றே. (4)

1269 கடவுளீகுவனென்றெண்ணிநித்தியமுங்கருதுறுமுயற்சிசெய்
யானே, லடலுறுசெல்வமடைகுவனேகொலருங்கலத்திட்ட
பாலடிசின், மிடலுடைக்கரத்தாலெடுத்துணாதெங்ஙன்வீங்கு
ம்வெம்பசிப்பிணியொழிப்ப, னுடல்பவந்தனக்கோராகரமாகு
முடனனிவாட்டுமெய்த்தவத்தோய். (5)

### நாலடியார்.

1270 இசையாதெனினுமியற்றியோராற்றா
லசையாதுநிற்பதாமாண்மை—யிசையுங்காற்
கண்டற்றிரையலைக்குங்கானலந்தண்சேர்ப்ப
பெண்டிரும்வாழாரோமற்று. (1)

### ஆசாரக்கோவை.

1271 *நந்தெறும்புதூங்கணம்புட்காக்கையென்றிவைபோற்
றங்கருமநல்லகடைப்பிடித்துத்தங்கரும
மப்பெற்றியாகமுயல்பவர்க்காசார
மெப்பெற்றியானும்படும. (1)

### திருக்குறள்.

1272 முயற்சிதிருவினையாக்குமுயற்றின்மை
யின்மைபுகுத்திவிடும். (1)

1273 மடியுளாண்மாமுகடியென்பமடியிலான்
றாளுளாடாமரையினாள். (2)

1274 பொறியின்மையார்க்கும்பழியன்றறிவறிந்
தாள்வினையின்மைபழி. (3)

1275 தெய்வத்தானாகாதெனினுமுயற்சிதன்
மெய்வருத்தக்கூலிதரும். (4)

1276 ஊழையுமுப்பக்கங்காண்பருலைவின்றித்
தாழாதுஞற்றுபவர். (5)

ஆகச் செய்யுள் 18, முயற்சி முற்றிற்று.

## ௩௫-அதி பொருட்சிறப்பு.

### கந்தபுராணம்.

1277 பிறநதநல்லுயிாகளெலாமபெருமைநல்கிய
விறநதோர்பொருண்மையதிரண்டின்வன்மையு
மறிநதவர்தெரிவரேலரியகல்வியிற
சிறநததுதிருவெனச்செப்பலாகுமால. (1)

1278 அளபபருங்கலவியுமாககமயாவையுங
கொளபபடுதன்மையிறகுறைவுறுதலைவ
வளர்ததலினமேதகவனப்புசசெய்தலிற
கிளததிடின்மேலதுகேடிலசெலவமே (2)

1279 நூலுறுகல்வியைநனிததுநாடியே
வாலறிவெய்தியவாததினோர்களு
மேலுறுதிருவொடுமேவுறுரெனின
ஞாலமஙகவர்தமைநவையுள்வைக்குமால். (3)

1280 அளப்பரும்விஞ்சையேயன்றிமேன்மையு
முளப்படுதன்மையுமுயர்நதசீர்த்தியுங்
கொளப்படுகொற்றமும்பிறவுங்கூட டலால
வளததினிற்சிறநததுமறறொன்றிலலையே. (4)

### திருவிளையாடற்புராணம்.

1281 நடபிடைவஞசஞசெயதுநடபினாக்கூண்மாறுட்டத
துட்படககவாநதுமேற்றோர்க்கியமியுமுதவாராயும
லடடியினபிதபபககூறிவாஙகியுஞசிலாபோவீடடப
பட்டதோவறத்தாறீட்டுநம்பொருள்படுமோவென்று. (1)

### நீதிநெறிவிளக்கம்.

1282 இன்சொலலனாறுநடையனாயினுமொன்றில்லானேல்
வன்சொல்லினலலதுவாய்திறவா—வெனசொலினுங்
கைததுடையானகாற்கீழொதுங்குங்கடன்ஞாலம்
பிததுடையவலலபிற. (1)

1283 இவறனமைகண்டுமுடையாரையாருங்
குறையிரந்துங்குற்றேவல்செய்ப—பெரிதுந்தா
முற்பகலொலாதார்கோறலுரைப்பினசெல்லல்
கற்பன்றேகல்லாமையன்று. (2)

இராமாயணம்.

1284 பூரியர்தமைவேந்தாக்கும்புவிபுரப்பிக்குந்துய்க்குஞ்
சீரியவுண்டிசேர்க்குநதேவர்தமமுலகம்போகுங்
காரியமனைத்துங்கூட்டுங்கருதலர்தம்மைவாட்டுங்
கூரியதிதன்மேலில்லைகொழும்பொனீர்கொண்மினென்றார்.

மேருமந்தரபுராணம்.

1285 *குலமபெரியகுணமறிவுவடிவுகுடிப்பிறப்புப
பொலங்கையுடையவர்ககலதுபுகழ்சசியினையடையா
விலங்குமனையாளுமபொருளில்லவிடத்திகழு
மலங்கல்வரைமார்பபொருளாதலினியழியல். (1)

சீவகசிந்தாமணி.

1286 வெனறியாக்கலுமேதகவாக்கலுங்
குன்றினார்களைகுன்றெனவாககலு
மனறியுங்கலவியோடழகாககலும்
பொன்றுஞ்சாகத்தினுயபொருள்செய்யுமே. (1)

1287 பொன்னினுகுமபொருபடையபபடை
தன்னினுகுநதரணிதரணியிற
பின்னையாகும்பெருமபொருளபபொரு
டுன்னுங்காலைத்துனனுதனவில்லையே. (2)

1288 செய்கபொருள்யாருஞ்செறுவாரைச்செறுகிற்கு
மெஃகுபிறிதில்லையிருக்தேயுயிரையுண்ணு
மையமிலையின்பமறனோடவையுமாக்கும
பொய்யில்பொருளேபொருண்மறறல்லபிறபொருளே. (3)

வளையாபதி.

1289 குலந்தருங்கல்விகொணர்ந்துமுடிக்கு
மலந்தகிளைகளழிபசிநீக்கு
நிலம்பகவெம்பியநீள்சுரமபோகிப்
புலம்பில்பொருடரப்புன்கண்மையுண்டோ. (1)

நாலடியார்.

1290 வடுவிலாவையகதுமன்னியமூன்றி
னடுவணதெய்தவிருதலையுமெய்து
நடுவணதெய்தாதானெய்துமுலைபபெய்
தடுவதுபோலுந்துயர். (1)

1291 ஆகாதெனினுமகததுநெய்யுண்டாகிற
போகாதெறும்புபுறஞ்சுற்றும்—யாதுங்
கொடாஅரெனினுமுடையாரைப்பற்றி
விடாஅருலகத்தவர். (2)

1292 அருகலதாகிபபலபழுததக்கண்ணும்
பொரிதாள்விளவினைவாவல்குறுகா
பெரிதணியராயினுமபீடிலாசெல்வங்
கருதுங்கடப்பாட்டதன்று. (3)

நான்மணிக்கடிகை.

1293 *கலவிற்பிறககுங்கதிர்மணிகாதலி
சொல்விறபிறக்குமுயர்மத—மெல்லெ
னருளிற்பிறக்குமறநெறியெலலாம்
பொருளிற்பிறந்துவிடும. (1)

1294 *நல்லார்கருந்தமமூரொனறாரில்லைநன்னெறிச்
செல்வார்கருநதம்மூரொன்றாரில்லை—யல்லாக
கடைகட்குநதம்மூரொன்றாரில்லைதங்கைத்
துடையார்க்குமெவ்வூருமூர். (2)

நல்வழி.

1295 *கல்லானேயானாலுங்கைப்பொருளொன் றுண்டாயி
னெல்லாருஞ்சென் றங்கெதிர்கொள்வ—ரில்லானை
யில்லாளும்வேண்டாண்மற் றீன்றெடுத்ததாய்வேண்டாள்
செல்லாதவன்வாயிற்சொல். (1)

திருக்குறள்.

1296 பொருளல்லவரைப்பொருளாகச்செய்யும்
பொருளல்லதில்லைபொருள். (1)

1297 இல்லாரையெல்லாருமெள்ளுவர்செல்வரை
யெல்லாருஞ்செய்வர்சிறப்பு. (2)

1298 செய்கபொருளைச்செறுநர்செருக்கறுக்கு
மெஃகதனிற்கூரியதில். (3)

1299 ஒண்பொருள்காழ்ப்பவியற்றியார்க்கெண்பொரு
ளேனையிரண்டுமொருங்கு. (4)

ஆகச் செய்யுள் 23, பொருட்சிறப்பு முற்றிற்று.

---

௩௬-அதி. கல்வி.

திருமந்திரம்.

1300 [¥]வல்லார்களென் றும்வழியொன் றிவாழ்கின்று
ரல்லாதவர்களறிவுபலவென்பா
ரெல்லாவிடத்துமுளனெங்கடம்மிறை
கல்லாதவர்கள்கலப்பறியாரே. (1)

1301 *நில்லாநிலையைநிலையாகநெஞ்சத்து
நில்லாக்குரம்பைநிலையென் றுணர்வீர்கா
ளெல்லாவுயிர்க்குமிறைவனேயாயினுங்
கல்லாதார்நெஞ்சத்துக்காணவொண்ணாதே (2)

1302 *நில்லாதுசிவனிலையன்றெனவெண்ணி
வல்லாரறத்துந்தவததுளுமாயினார்
கல்லாமனிதர்கயவருலகினிற்
பொல்லாவினைத்துயர்போகஞ்செய்வாரே (3)

1303 *கல்லாதமூடரைக்காணவுமாகாது
கல்லாதமூடர்சொற்கேட்கககடனன்று
கலலாதமூடர்க்குககலலாதார்நல்லாராங்
கல்லாதமூடர்கருததறியாரே. (4)

1304 *கற்றுஞ்சிவஞானமில்லாக்கலதிகள
சுற்றமுமவிடார்துரிசறுர்மூடர்கண
மற்றுமபலதிசைகாணர்மதியிலோா
கறறன்பினிறபோாகணக்கறிந்தார்களே. (5)

கந்தபுராணம்.

1305 மாற்படுபுந்தியின்மறுவில்சேதனம
பாற்படுமுயிர்க்கெலாம்பவததினமாண்பய
னூற்படுகல்வியினுவலவளத்தினின்
மேற்படுகினறதிலவிழுமிதில்லையே (1)

1306 திருமைகொள்வளனொடுதீதில்கல்வியா
மிருமையினொன்றினையெய்திடாதெனி
னருமைகொளவவுயிரதனினறறவும்
பெருமையதுடையதுபேயின்றோற்றமே. (2)

விநாயகபுராணம்.

1307 உடல்வயத்தாகுஞ்சாதியுயர்ந்தவர்சாதிதாழ்ந்தோர்
திடமுறவுபிரிதேடுசெலவுறுங்கல்விதம்மா
லடர்தரும்பெருமையெய்தாராதலாலகக்கண்ணாகித்
தொடர்புறுங்கல்விகல்லாத்தொழிலினைவிடவேவேண்டும் (1)

1308 வறுமையான்மடமைதன்னால்வருந்திநெஞ்சழியுங்காலை
யுறுதிசெய்துணையாங்கற்றவுணர்வினைவளர்க்குமென்று

மிறுதியில்லாதவின் படீட்டுமாதலினுற்கற்று
மறுவறுவொழுக்கமுள்ளார்வாய்மொழிகேட்டல்வேண்டும்.

1309 இழிந்தவனுயர்ந்தசொன்னுரையியம்பினுமுயர்ந்தோனவாயி
னிழிந்தசொன்றுறினுமுள்ள வியல்பறிந்தோம்பிநீக்கிப்
பொழிந்தெனப்பிறர்தாங்கூறும்புலப்படாப்பொருளுந்தெ
ள்ளி, வழிந்தெனத்தெளியக்கேட்போமனங்கொளப்புக
[றலவேண்டும். (3)

திருக்குற்றலப்புராணம்

1310 இருவிழிகள்வாண்முகத்திலிருந்தாலுமவானிரவியெழுந்தா
லன்றிக, கருதுநிலப்பல்பொருளுங்காணடலரிதாமுலகிற
கணபோலயாருமபெருகியசெலவமுமடைவுமபெற்றாலுநூற
கேள்விபெறுவாராகன்றித, திருவளர்புண்ணியபாவமிம்மை
மறுமையுமவீடுந்தெரியாவன்றே. (1)

கூர்மபுராணம்.

1311 நூல்பலகற்றோனேனுமபொருளுணிசதறியானெனனின
மாலொடுமவாளாகததுமாநிறக்காகமபோலவ
னேலவுறககற்றநூலினபொருடெரிந்திருநூல்சொன்ன
சீலமேயொழுகுகின்றோனசிவனடிநீழல்சேர்வான். (1)

1312 பொருவிலாவிதிகாசபுராணங்க
டெருளுமாந்தர்சிறப்புளராகுவர்
தருமநூலும்புராணத்தினறன்மையுங்
கருதியோர்ந்தவரேகலைவல்லரே (2)

உபதேசகாண்டம்.

1313 கற்றிலாய்கலைகற்றுணரார்முக
முற்றுநோக்கின்மயானத்தையொக்குமால்
பெற்றுளார்பெறுப்பேறுதங்காதலர்
சொற்றகல்வியிற்றூயரென்றோதலே. (1)

### தாயுமானவர்பாடல்.

1314 கற்றதுங்கேட்டதுந்தானேயேதுககாகக்
கடபடமெனறுருட்டுதறகோகல்லாலெமமான்
குற்றமறக்கைகாட்டுஙகருத்தைதககண்டு
குணஙகுறியறறின்பநிட்டைகூடவன்றோ. (1)

### நன்னெறி.

1315 உடலின்சிறுமைகண்டொணபுலவர்கல்விக்
கடலின்பெருமைகடவார்—மடவரால்
கண்ணளவாய்நினறதோகாணுங்கதிரொளிதான்
விண்ணளவாயிறறோவிளமபு. (1)

1316 கறறவழிவினரைக்காழறுவர்மேன்மக்கண்
மற்றையர்தாமென்றுமதியாரே—வெற்றிநெடு
வேல்வேண்டுமவாள்விழியாய்வேண்டாபுளிங்காடி
பாலவேண்டுமவாழைப்பழம். (2)

1317 பொன்னணியும்வேந்தர்புனையாப்பெருங்கல்வி
மன்னுமறிஞரைததாமறறொவ்வார்—மின்னுமணி
பூணும்பிறவுறுபபுப்பொன்னேயதுபுனையாக்
காணுங்கண்ணொக்குமோகாண். (3)

1318 பன்னும்பனுவற்பயனதேரறிவிலார்
மன்னுமறங்கள்வலியிலவே—நன்னுதால்
காழொன்றுயர்திணைகதவுவலியுடைத்தோ
தாழொன்றிலதாயிறறுன. (4)

### சோமேசர்முதுமொழிவெண்பா.

1319 மெய்த்ததிருவள்ளுவனார்வெனறுயர்ந்தார்கல்விநலந்
துய்த்தசங்கத்தார்தாழ்ந்தார்சோமேசா—வுய்த்தறியின்
மேற்பிறந்தாராயினுங்கல்லாதார்கீழ்ப்பிறந்துங்
கற்றாரனைத்திலர்பாடு. (1)

## நீதிநெறிவிளக்கம்.

1320 அறம்பொருளின்பமும்வீடும்பயக்கும்
புறங்கடைநல்லிசையுநாட்டு—முறுங்கவலொன்
றுற்றுழியுங்கைகொடுக்குங்கல்வியினூங்கில்லை
சிற்றுயிர்க்குற்றதுணை. (1)

1321 தொடங்குங்காற்றுன்பமாயினபம்பயக்கு
மடங்கொன்றறிவகற்றுங்கல்வி—நெடுங்காம
முற்பயக்குஞ்சின்னீரவின்பத்தின்முற்றிழாய்
பிற்பயக்கும்பீழைபெரிது. (2)

1322 கல்வியேகற்புடைப்பெண்டிரப்பெண்டிர்க்குச்
செல்வப்புதல்வனேயீர்ங்கவியாச்—சொல்வள
மல்லல்வெறுக்கையாமாணவைமண்ணுறுத்துஞ்
செல்வமுமுண்டுசிலர்க்கு. (3)

1323 எத்துணையவாயினுங்கல்வியிடமறிந்
துய்த்துணர்வில்லெனினில்லாகு—முய்த்துணர்ந்துஞ்
சொல்வன்மையின்றெனினென்னாமஃதுண்டேற்
பொன்மலர்நாற்றமுடைத்து. (4)

1324 கலைமகள்வாழ்க்கைமுகத்ததெனினு
மலரவன்வண்டமிழோர்க்கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்புமாய்வனபோன்மாயாபுகழ்கொண்டு
மற்றிவர்செய்யுமுடம்பு. (5)

1325 நெடும்பகற்கற்றவவையத்துதவா
துடைந்துளாருட்குவருங்கல்வி—கடும்பக
லேதிலான்பாற்கண்டவில்லினும்பொல்லாதே
தீதென்றுநீப்பரிதால். (6)

1326 வருந்தித்தாங்கற்றனவோம்பாதுமற்றும்
பரிந்துசிலகற்பான்றொடங்கல்—கருந்தனங்
கைத்தலத்தவுய்த்துச்சொரிந்திட்டரிப்பரித்தாங்
கெய்த்துப்பொருள்செய்திடல். (7)

1327 கற்பி
மறந்ரோணிகலம்வேண்டாவா—முறற
முழுமணிபபூணுக்குபபூண வேணடாயாரே
யழகுககழகுசெய்வார். (8)

1328 முற றுமுணாநதவரில்லேமுழுவதுாஉங
கறறனமெனறுகளியறக—சிற றுளியாற
கல்லுநதகருந்தகராகனஙகுழாய்
கொலலுலேககூடதிறுல. (9)

1329 தம்மினமெலியாரைநோக்கித தமதுடைமை
யமமாபெரிதெனறமகிழ்க— தமமினுங்
கறருரைநோககிககருதத்ழிககற்றதெல்லா
மெறறேயிவர்க்குநாமெனறு (10)

1330 கற்பனவூழற்ருாகல்விக்கழகததாங்
கொறகமினறாததைவாயஙகாததன்—மறறுத்தம
வலலுருவஞ்சனமினென்பவேமாபறவை
புலலுருவஞ்சுவபோல். (11)

புறநானூறு

1331 உறறுழியுதவியுமுறுபொருடகொடுததும்
பிறைறசிலேமுனியாதுகறறனனறே
பிறப்போரன்னவுடனவயிறறுளளுஞ
சிறபபின்பாலாற்றுயுமனநதிரியு
மொருகுடிபபிறநதபலலோருளளுஞ்
மூத்தோன்வருகவெனனுதவரு
ளறிவுடையோனுறரசுஞ்செலலும்
வேறறுமைதெரிநதநாறபாலுளளுங்
கீழ்பாலொருவனகற்பின்
மேறபாலொருவனுமவன்கட்படுமே. (1)

### சீவகசிந்தாமணி.

1332 கைப்பொருள்கொடுத்துங்கற்றல்கற்றபின்கண்ணுமாகு [கும்
மெய்ப்பொருள்விளைக்குநெஞ்சின்மெலிவிற்கோர்துணையுமா
பொய்ப்பொருள்பிறகள்பொன்னுமைபுகழுமாந்துணைவியாக்கு
மிப்பொருளெய்திநின்றீரிரங்குவதென்னையென்றான். (1)

### நாலடியார்.

1333 குஞ்சியழகுங்கொடுந்தானைக்கோட்டழகு
மஞ்சளழகுமழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாமென்னுநடுவுநிலைமையாற்
கல்வியழகேயழகு. (1)

1334 இம்மைப்பயக்குமாலீயக்குறைவின்றாற்
றம்மைவிளக்குமாற்றாமுளராகக்கேடின்றா
லெம்மையுலகத்தும்யாங்காணேங்கல்விபோ
மம்மராறுக்குமருந்து. (2)

1335 களர்நிலத்துப்பிறந்தவுப்பினைச்சான்றோர்
விளைநிலத்துநெல்லின்விழுமிதாக்கொள்வர்
கடைநிலத்தோராயினுங்கற்றுணர்ந்தோரைத்
தலைநிலத்துவைக்கப்படும். (3)

1336 வைப்புழிக்கோட்படாவாய்த்தீயிற்கேடில்லை
மிக்கசிறப்பினரசர்செறின்வவ்வா
ரெச்சமெனவொருவன்மக்கட்குச்செய்வன
விச்சைமற்றல்லபிற. (4)

1337 கல்விகரையிலகற்பவர்நாள்சில
மெல்லநினைக்கிற்பிணிபல—தெள்ளிதி
னாராய்ந்தமைவுடையகற்பவேநீரொழியப்
பாலுண்குருகிற்றெரிந்து. (5)

1338 தோணியியக்குவான்றொல்லைவருணத்துக்
காணிற்கடைப்பட்டானென்றிகழார்—காணு

யவனறுணையாயாறுபோயற்றேநூல்கற்ற
மகனறுணையாநல்லகொளல். (6)

1339 அலகுசால்கற்பினறிவுநூல்கல்லா
துலகநூலோதுவதெல்லாம—கலகல
கூஉந்துணையல்லாறகொண்டுதடுமாறறம
போஒந்துணையறிவாரில். (7)

1340 நுண்ணறிவினோரொடுகூடி நுகர்வுடைமை
விண்ணுலகேயொக்குமவிழைவிறறு—ணுண்ணூ
லுணர்விலராகியவூதியமில்லார்ப்
புணர்தனிரயததுளொன்று. (8)

1341 கல்லாதுநீண்டவொருவனுலகதது
நல்லறிவாளரிடைபபுக்கு—மெல்ல
விருப்பினுநாயிருந்தற்றேயிரா அ
துரைபபினுநாய்குரைததறறு. (9)

நான்மணிக்கடிகை.

1342 திரியழறகாணினதொழுபவிறக்
னெரியழறகாணினிகழ்ப—வொருகுடியிற்
கல்லாதுமூததானைசைவிட்டுகசுற்று
னிளமைபாராட்டுமுலகு. (1)

1343 கற்பககழிமடமஃகுமடமஃகப
புறகதிர்நதிவ்வுலகிறகோளுணருங்கோளுணர்ந்தாற்
றததுவமாயநெறிபடருமநெறி
யிபபாலுலகததிசைநிறீஇயபபா
லுயர்ந்தவுலகமபுகும (2)

1344 கடற்குட்டமபோழ்வர்கலவர்படைக்குட்டம்
பாய்மாவுடையானுடைக்கிற்குந்—தோமி
றவக்குட்டந்தனனுடையானீந்துமவைக்குட்டங்
கற்றான்கடநதுவிடும். (3)

1345 வாலிழையார்முன்னர்வனப்பிலான்பாடிலன்
சாலுமவைப்படிற்கல்லாதான்பாடிலன்
கற்றொருவனுமபாடிலனே கல்லாத
பேதையார்முன்னர்ப்படின் (4)

1346 மனைக்குப்பாழ்வாணுதலின்மைதான்செலலுந்
திசைக்குப்பாழ்நட்டோரையின்மை—யிருந்த
வவைக்குப்பாழ்மூத்தோரையின்மைதனக்குப்பாழ்
கற்றறிவில்லாவுடம்பு. (5)

1347 மனைக்குவிளக்கமடவாண்மடவா
டனக்குத்தகைசால்புதல்வர்—தனக்கினிய
காதற்புதல்வர்க்குக்கல்வியேகலவிதனக்
கோதிறபுகழ்சாலுணர்வு. (6)

திரிகடுகம்.

1348 நுணமொழிநோக்கிப்பொருள்கொளலுநூற்கேலா
வெவ்மொழிவேண்டினுஞ்சொல்லாமை—நன்மொழியைச்
சிற்றினமல்லார்கட்சொலலுமிம்மூன்றுங்
கற்றறிந்தார்பூண்டகடன. (1)

பழமொழி,

1349 உணற்கினியவின்னீர்பிறிதுழியில்லென்னுங்
கிணற்றகத்துத்தேரைபோலாகார்—கணைக்கினை
முற்றப்பகலுமுனியாதினிதோதிக்
கற்றலிற்கேட்டலேநன்று (1)

அறநெறிச்சாரம்.

1350 பலகற்றோமயாமென்றுதற்புகழவேண்டா
வலர்கதிர்ஞாயிற்றைக்கைக்குடையுங்காக்குஞ்
சிலகற்றார்கண்ணுமுளவாம்பலகற்றார்க்
கச்சாணியன்னதோர்சொல். (1)

1351 புண்ணுசபபோழ்ந்துபுலால்பழிபபசதாம்வளர்ந்து
வண்ணப்பூண்பெய்வசெவியல்ல—நுண்ணூ
லறவுரைகேட்டுணாநதஞ்ஞானநீக்கித்
துறவுரைகேட்பசெவி. (2)

1352 பொருளிலொருவறகிளமையுமபோற்று
மருளிலொருவறகறனுந—தெருளான
திரிந்தாழ்ந்தநெஞ்சினுன்கலவியிம்மூன்றும
பரிந்தாலுஞ்செய்யாபயன. (3)

சிறுபஞ்சமூலம்.

1353 மயிர்வனபபுங்கண்கவருமார்பின்வனபபு
முகிர்வனப்புங்காதினவனபபுஞ—செயிர்தீர்நத
பல்லின்வனபபுமவனப்பல்லநூறகியைந்த
சொல்லினவனபபேவனபபு. (1)

மூதுரை.

1354 *கவையாகிக்கொமபாகிக்காட்டகத்தேநிற்கு
மவையல்லநல்லமரங்கள்—சவைநடுவே
நீட்டோலைவாசியாநின்றான்குறிபபறிய
மாட்டாதவனன்மரம. (1)

1355 *மன்னனுமாசறககற்றோனுஞசீர்தூக்கின்
மன்னனிறகறறோனசிறபபுடையன—மன்னனுக்குத்
தனதேசமலலாற்சிறப்பில்லைகற்றோற்குச்
சென்றவிடமெல்லாஞ்சிறப்பு. (2)

நீதிவேண்பா.

1356 *ஆனைமருப்புமருங்கவரிமான்மயிருங்
கானவரியுகிருநகற்றோரு—மானே
பிறந்தவிடத்தன்றிபபிறிதொருதேசத்தே
சிறநதவிடத்தன்றோசிறப்பு. (1)

1357 *வாக்குநயத்தாலன்றிக்கற்றவரைமற்றவரை
யாகநயத்தாலறியலாகாதே—காக்கையொடு
நீலச்சிறுகுயிலைநீடிசையாலன்றியே
கோலத்தறிவாரோகூறு. (2)

திருக்குறள்.

1358 கற்ககசடறக்கற்பவைகற்றபி
னிற்கவதற்குத்தக. (1)

1359 கண்ணுடையரென்பவர்கற்றோர்முகத்திரண்டு
புண்ணுடையர்கல்லாதவர் (2)

1360 உடையார்முனில்லார்போலேக்கற்றுங்கற்றார்
கடையரேகல்லாதவர். (3)

1361 தொட்டனைத்தூறுமணற்கேணிமாந்தர்க்குக்
கற்றனைத்தூறுமறிவு. (4)

1362 யாதானுநாடாமாலூராமாலென்னொருவன்
சாந்துணையுங்கல்லாதவாறு. (5)

1363 ஒருமைக்கட்டான்கற்றகல்வியொருவற்
கெழுமையுமேமாப்புடைத்து. (6)

1364 தாமின்புறுவதுலகின்புறக்கண்டு
காமுறுவர்கற்றறிந்தார். (7)

1365 கேடில்விழுச்செல்வங்கல்வியொருவற்கு
மாடல்லமற்றையவை. (8)

1366 அரங்கின்றிவட்டாடியற்றேநிரம்பிய
நூலின்றிக்கோட்டிகொளல். (9)

1367 கல்லாதான்சொற்காமுறுதன்முலையிரண்டு
மில்லாதாள்பெண்காமுற்றற்று. (10)

1368 கல்லாதானொட்பங்கழியநன்றாயினுங்
கொள்ளாரறிவுடையார். (11)

1369 கல்லாவொருவன்றகைமைதலைப்பெய்து
சொல்லாடச்சோர்வுபடும். (12)

1370 நுண்மாணுழைபுலமில்லானெழினல
மண்மாண்புனைபாவையற்று. (13)

1371 நல்லார்கட்பட்டவறுமையினின்னாதே
கல்லார்கட்பட்டதிரு. (14)

1372 விலங்கொடுமக்களனையரிலங்குநூல
கற்றாரோடேனையவர். (15)

1373 செல்வத்துட்செல்வஞ்செவிச்செல்வமச்செல்வஞ்
செல்வத்துளெல்லாந்தலை. (16)

1374 கற்றிலனாயினுங்கேட்கவஃதொருவற
கொற்கத்தினூற்றாந்துணை. (17)

1375 பிழைத்துணர்ந்தும்பேதைமைசொல்லாரிழைத்துணர்ந்
தீண்டியகேள்வியவர். (18)

1376 நுணங்கியகேள்வியரல்லார்வணங்கிய
வாயினராதலரிது. (19)

ஆகச் செய்யுள் 77, கல்விமுற்றிற்று.

---

## ௩௭-அதி. பெரியாரைத்துணைக்கோடல்.

காஞ்சிப்புராணம்.

1377 சிறியராயினார்சார்பினைவிழையன்மின்றிறல்கெழுபெரியோரா
மறிஞராயினார்சார்பினைவிழைமினோவலரிதழ்விரிகொன்றை
வெறிநறுந்தொடையெம்பிரான்சார்பினைவிழைதலாலுரகங்
கண், மறுவிலாற்றல்சால்கலுழனைவினாயினவாழ்ந்தனையோ
வெனன. (1)

விநாயகபுராணம்.

1378 விழுப்பபொருணுங்கையும்விளங்கத்தெள்ளுபு
முழுப்பவைம்பொறியையுமுனிந்துநீத்தவர்
வழுப்படாமறையவர்மற்றைக்கல்வியோர்
குழுப்புறத்தாதரங்கூர்தல்வேண்டுமால். (1)

1379 நுண்மைபறனுமிகத்தெளிந்துநூலினியல்புமுலகியல்பும
வண்மையுறத்தேற்றிடுமாறறல்வல்லராகிவளர்சீலந்
திண்மையறிவாயுளின்முதிர்ந்தோர்சேரநன்குமதித்திடுக
வெண்மைபுரியாதுயர்நதிடுகவியமபும்வழியேநின்றிடுக. (2)

பாகவதம்.

1380 *விடமும்வநதீசனகோலமிடற்றினீலவண்ண
வடிவுபெற்றணியதாகிவயஙகிற்றுப்பெரிதுமென்றுற
கொடியரும்பெருமையோரைக்கூடினவெங்கோதுநீங்கி
யொடிவறுநலமபெறறுயதனுரைப்பதென்னுலகினம்மா (1)

1381 *அளிசெயுமனநதராகியைம்புலனடக்கியென்று
மொளிகொடுபுனிதமேன்மையுவப்பருஞ்சமனுற்றுள்ளந்
தெளிவுறுபெரியோர்தம்மைசசேரினல்லன்புகூருங்
களித்நமனபுகூரிற்கலக்குநல்லறிவுதானே. (2)

ஞானவாசிட்டம்.

1382 *அறகதுறைவைநிறைவாககுஞ்சமபத்தாககுமாபத்தைச்சுப
மாக்குமசுபநதனைசு, சிறககுமுயர்ந்தவர்கூட்டமென்னுங்
கங்கைச்சீதநீராடினர்க்குசசெநதீவேளவி, யிறககரியதவந்தா
னர்தீர்த்தம்வேண்டாவிடாபந்தமறுதெவர்க்குமினியோரா
கிப், பிறபபெனுமவேலைபபுணையாமுணர்வுசான்றபெரியோ
ரையெவ்வகையுமபேணலவேணடும. (1)

1383 *தவங்களாறறெய்வநீராற்சாத்திரங்களினுற்போகாப
பவங்களையுயாந்தோர்பாதமபணிந்துபற்றறுக்கவேண்டு
மவங்களாங்காரங்கோபமறவுந்தேய்ந்தியற்கையான
சுவங்களினடநதுநன்னூற்றுறைநின்றோருயாந்தமேலோர். ()

### சிவ - தோன்றி.

1384 *அஞ்சையுமறுத்தமேலோரடிதொழுதெழுவராகில்
வஞ்சமாமனத்தரேனுமதித்துறவணங்கலவேண்டும்
செஞ்சடையொருவன்கண்டஞ்சேர்தரப்படுதலாலே
நஞ்சமுமுலகுக்கெல்லாந்தொழப்படுநலத்ததன்றே. (1)

1385 *அழுக்குடைச்சாதியோருமடைந்துமெய்ஞ்ஞானிதன்னை
விழுப்புடைத்தலைவராவர்வேதக்குளிகைசேர்ந்த
விழுக்குடையிரும்புஞ்செம்புமிலங்குசெம்பொன்னுமாங்கே
யொழுக்கமோடவனருள்சேர்மினேங்குவீடெய்தலுற்றார். (1)

### பட்டினத்தடிகள்பாடல்

1386 நல்லாரிணக்கமுநின்பூசைநேசமுஞானமுமே
யல்லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளு
மில்லாளுஞ்சுற்றமுமைந்தருமவாழ்வுமெழிலுடம்பு
மெல்லாமவெளிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே. (1)

### இராமாயணம்.

1387 கரியமாலினுங்கண்ணுதலானினு
முரியதாமரைமேலுறைவானினும்
விரியபூதமோரைந்தினுமெய்யினும்
பெரியரந்தணர்பேணுதியுள்ளத்தால். (1)

1388 அந்தணாளர்முனியவுமாங்கவர்
சிந்தையாலருள்செய்யவுந்தேவரி
னொந்துளாரையுநோயதுயர்ந்தாரையு
மைந்தவெண்ணிலவரம்புமுண்டாங்கொலோ. (2)

### குசேலோபாக்கியானம்

1389 ஆயின்மறைமுகற்கலைகளனைத்துமுணர்ந்தறமறமாராய்ந்
தேயினிதுநெறிநின்றெனனுணராததுமவர்நட்பை
வியினுந்தான்மறப்பார்களோமேதையோர்மறப்பரே
ஞயினுங்கீழ்ப்பட்டவர்களவர்காணிந்நானிலத்தே. (1)

1390 நல்லார்சொல்விருமபுவதூநலலாரைக்காண்பதுவு
நலலார்கணெகொன் றுதவுவதுநலலாரைபபுகழ்வதுவு
நலலார்நனெறன் றுரைப்பநவிற றியவிவவெலாமடங்க
நல்லார்நட்பென் றுமுறனன்றன்றேநான்மறையோய் (2)

1391 பொனனுள்ளான்பூமியுளளான்புந்தியுள்ளானுயிடினு
மெனனுள்ளானுவனவனிருந்தவர்தநட்பிலனேற
பொன்னிலலான்பூமியில்லான்புநதியில்லானுயிடினு
மென்னில்லானுவனவனிருநதவர்தநடபுளனேல் (3)

1392 பேயோடுபழகுறினும்பிரிவதரிதரிதென்று
தூயோர்கண்மொழிவாறறாயோருமபுகழ்தூயோ
ராயோர்கள்பெருநட்பையருந்தவத்தாற்பெறலன்றி
யேயோவெணமையிறகிடைபபினிகழ்வரோவிகழ்வில்லார். ()

1393 சமயம்வரினிடிகதுரைபபார்தக்கவழிச்செலச்செய்வா
ரிமையவர்தமுலகுறவுமிருளுலகமபகையுமா
யமையவறிவுறுத்துவாரந்தோநூல்கறறுணர்நத
கமையுடையாரநடபெவர்களுக்காண்கிடைக்குமரிதரிது. (5)

1394 கூடுதற்குக்கூடாதகூட்டததுபபடுநட்பு
வீடுதறகுத்தககதாய்நாடோறுமெலிநதொழியு
நீடுதற்குததககதுநனெறிநின்றோர்நட்பொன்றே
தேடுதறகுககிடையாததிரவியமுமஃதாமால். (6)

1395 முததிககுவித்தாகுமுழுதுணர்ந்தோர்பெருநட்பே
திததிக்குநாடோறுந்தேவர்பெறறகருநதிருவுஞ
சிததிக்கும்படியருளுஞ்செபபரிதாலதுநிறக
வெததிக்குமபுகழுநினககியனமணாநன்காயிற்றே. (7)

நாலடியார்

1396 அறியாபபருவததடங்காரோடொன்றி
நெறியல்லசெய்தொழுகியவவு—நெறியறிநத
நறசார்வுசாரக்கெடுமேவெயின்முறுகப
புறபனிபபறறுவிட்டாங்கு. (1)

1397 இறப்பநினையுங்காலின்றெனினும
பிறப்பினையாருமுனியார்—பிறப்பினுட்
பண்பாற்றுநெஞ்சத்தவர்களோடெஞ்ஞான்று
நண்பாற்றிநட்கப்பெறின். (2)

1398 ஊரங்கணநீருரவுநீர்சேர்ந்தக்காற்
பேரும்பிறிதாகித்தீர்த்தமாம்—ஓருங்
குலமாட்சியில்லாருங்குன்றுபோனிற்பர்
நலமாட்சிநல்லாரைச்சார்ந்து. (3)

1399 ஒண்கதிர்வாண்மதியஞ்சேர்தலாலோங்கிய
வங்கண்விசும்பின்முயலுந்தொழப்படூஉங்
குன்றியசீர்மையராயினுஞ்சீர்பெறுவர்
குன்றன்னார்கேண்மைகொளின். (4)

1400 பாலோடளாயநீர்பாலாகுமல்லது
நீராய்நிறந்தெரிந்துதோன்றாதாந்—தேரிற்
சிறியார்சிறுமையுந்தோன்றாதாநல்ல
பெரியார்பெருமையைச்சார்ந்து. (5)

1401 இரும்பினிரும்பிடைபோழ்ப்பெருஞ்சிறப்பி
னீருண்டநீராலவாய்ப்பூசப—தேரி
னரியவரியவற்றாற்கொள்பபெரிய
பெரியாரானெய்தப்படும (1)

1402 *கந்திறப்பிணிப்பர்களிற்றைக்கதந்தவிர
மந்திரத்திறற்பிணிப்பர்மாநாகங்—கொந்தி
யிரும்பிற்பிணிப்பர்கயத்தைச்சான்றோரை
நயத்திற்பிணித்துவிடல். (2)

அறநெறிச்சாரம்.

1403 *நட்டாரைவேண்டினறுமென்கதுப்பினாய்
விட்டாரையல்லாறகொளல்வேண்டா—விட்டார்

பொறிசுணங்குமென்முலைப்பொன்னனையுய்ப்பர்
மறிதரவில்லாக்கதி. (1)

1404 *காலொடுகையமுக்கிப்பிள்ளையைவாய்நெறித்துப்
பாலொடுநெய்பெய்யுந்தாயனையர் — சால
வடக்கதனைதவேண்டியறன்வலிதுநாளுங்
கொடுத்துமேற்கொண்டொழுகுவார் (2)

மூதுரை.

1105 *நல்லாரைக்காண்பதுவுநன்றேநலமிகக
நல்லார்சொற்கேட்பதுவுநனறே — நல்லார்
குணங்களுரைப்பதுவுநனறேயவரோ
டிணங்கியிருப்பதுவுநன்று. (1)

1406 அறனறிந்துமூததவறிவுடையார்கேண்மை
திறனறிந்துதேர்ந்துகொளல (1)

1407 அரியவற்றுளெல்லாமரிதேபெரியாரைப்
பேணிததமராககொளல். (2)

1408 தம்மிறபெரியாரதமராவொழுகுதல்
வனமையுளெல்லாந்தலை (3)

1409 பல்லார்பகைகொளலிற்பத்தடுத்ததீமைத்தே
நலலார்தொடர்கைவிடல். (4)

ஆகச் செய்யுள் 33, பெரியாரைத்துணைக்கோடல் முற்றிற்று.

## ந அ-அதி. பெரியாரைப்பிழையாமை,

விநாயகபுராணம்.

1410 நீத்தவராகியோர்நெருபபுயிர்ததிடிற்
காத்திடுங்கடவுளருங்கலங்குமாதலா
லேத்துவதேகடனென்றுமைந்தனே
யாத்தர்கள்பொறுப்பரென்றவமதித்திடேல். (1)

1411 குரவரைப்பெரியரைக்கூறுமாகம
விரவுறுமறைகளைமேதகும்படி
பரவுதலலதவர்பாங்கர்நிந்தனை
கரவுறவுளதினுங்கருதொணாதே. (2)

1412 ஆற்றனமிகுந்தவேந்தரையுமரியதவத்துமுனிவரையும
போற்றியொழுகினெபொருளும்போற்றலாகுமவமதிப்பிற்
றேற்றமிகுஞ்சார்பினரேனுஞ்சிதைவர்திகழ்முபபுரர்சூரன்
சாற்றிந்திரன்மாலாதியருந்தளர்ந்தாரெனிற்சாற்றுவதென்
[னே (3)

கூர்மபுராணம்.

1413 கடவுளர்தமமைவேதமுனிவரைக்கடவுடகற்பின
மடநலார்தம்மைககூர்வேன்மன்னரைமுனிந்துசீறிச
சுடுசொலாலிகழ்வோர்பாவந்தொலைநிடவேண்டினவைக்
கடியவெங்கொள்ளிதன்னைறகருககிடவேண்டுமன்றே. (1)

சிவ - ஞானசாரம்.

1414 *பெரியமாமுனிவனறன்னைபபேதைமையதனின்மிகுத்
தெரிவிலாதொருவன்சொலலுநதீமொழியதனினாலே
யரியதீநரகந்தன்னிலழுந்துமோர்கற்பமெனறு
புரிவிலாமறைகளெல்லாமபுகன்றிடும்போதமிககோய் (1)

1415 *தேவர்க்குந்தேவனாகிததிகழ்தருஞானிதன்னைப்
பாவத்தினொருவன்மிக்குப்பண்ணியநிந்தைசொலலிற்
றூவற்றவயன்மாலீசனருன்முதற்சகத்தியார்க்கு
மோவற்றகொடியநிந்தையெனமறையுரைக்குமன்றே. (2)

1416 *தன்னுணர்பரமயோகிதனக்கிழுக்கதனைச்சொல்லன்
மன்னுறுமறையோர்தமமைவதைததபாவததிற்கோடி
சொன்னதுகேட்டலொக்கத்துணிதல்கோவதையிற்கோடி
யென்னவேமறைகளெல்லாமெடுத்துரைசெய்ததன்றே. (3)

1417 *தத்துவவித்தாமேலோன்றனக்கொருதீமைதன்னைப
புத்தியானினையினுநதான்பொருட்களவதனிற்கோடி

மததமாமவரிற்கூட ன்மதயபான ததிற்கோடி
யொததபாதகங்களென்றேயுரைததனமறைகளன்றே. (4)

1418 *கொடுகியமொழிகொடுகோதின்ஞானியை
வடுவதுபேசிடுமறிவில்பாதக
னிடைவிடலறவெரிநரகில்வீழ்ந்தழிந்
துடுமதியளவுமஙகுழைததுமாயுமே. (5)

1419 *அறிவினிலநிர்தனுமரிய யோகியை
மறுவதுபேசிடுமதியில்பாதக
னுறுபுழுநரகில்வீழ்நதூழியூழியங்
கிறுதுயர்படுவதையியமபலாகுமோ. (6)

1420 *உனனருமறிவின்மிக்குணருஞானியை
யினனல்செய்பாதகனெழுகுலத்துள
துன்னரும்பிதிரர்களொடுஞசுழனறுதாம்
வெநரகில்விழவேதமோதுமே. (7)

1421 *தோமருஞானியைத்துகளுரைத்தவ
ரேமுறக்கேட்டவரிசைந்திருந்தவ
ராமெனமதித்தவரவரிற்கூடியோர்
தாமிவர்பஞ்சபாதகரிற்றண்ணியோர். (8)

1422 *உள்ளத்தேயுணர்வுநட்டயோகியைநிந்தைகேட்கிற்
றெள்ளேத்தன்செவிபுதைததுத்தூரத்தாம்போவதேயாங்
கள்ளத்தார்தம்மைக்காணல்கருதுதன்மொழிதல்வேண்டா
வள்ளற்பாதகரைக்கோறலறத்தையுமளித்ததன்றே. (9)

சிவ-தத்துவப்பிரகாசம்.

1423 *ஒழுக்கமேபுரிந்தோனுதலதனைவிட்டொழிந்தோனுத
விழுக்கஞ்செய்மூர்க்கனுதல்பண்டிதனுதலெண்ணில்
பழிப்பருஞானத்தன்னின்முயல்பவன்பணியத்தக்கோன்
றெழுத்சகுஞானியென்றேசொல்லவேண்டுவதுமுண்டோ(1)

நீதிநெறிவிளக்கம்.

1424 பணியப்படுவார் புறங்கடையராகத்
தணிவில் களிப்பினுற் றாழ்வார்க்—கணிய
நிலையாமை முயக்கெனினுஞ் செய்தன்றே மூத்தாள்
புணர்முலைப் போகங்கொளல். (1

ஸ்ரீராமாயணம்.

1425 தகையுறு தமமுனை தநதாயைத்தநதையை
மிகையுறு குரவரையுலகினவேந்தனைப
பகையுறவருதலுநதுறநதபணபிது
நகையுறலனறியுநயககறபாலதோ. (1)

நாலடியார்.

1423 பொறுப்பரென்றெண்ணிப்புரைதீர்ந்தார்மாட்டும்
வெறுப்பனசெய்யாமைவேண்டும்—வெறுத்தபி
னார்க்குமருவியணிமலைநன்னாட
போகுதலயார்க்குமரிது. (1)

பழமொழி.

1427 நெறியாலுணராதுநீர்மையுமின்றிச்
சிறியாரெளியார்களென்று—பெரியாரைத்
தங்கணேர்வைத்துத்தகவல்லகூறுத
றிங்களைநாய்க்குரைத்தற்று. (1)

ஆசாரக்கோவை.

1428 *நின்றக்கானிற்கவடக்கத்தாலென்று
மிருந்தக்காலேவாமைபோகார்—பெருந்தக்கார்
சொல்லிற்செவிகொடுத்துக்கேட்டீகமீட்டும்
வினுவற்கசொல்லொழிந்தக்கால். (1)

திருக்குறள்

1429 பெரியாரைப்பேணுதொழுகிற்பெரியாராற்
பேராவிடும்பைதரும். (1)

1430 எரியாற்சுடப்படினுமுய்வுண்டாமுய்யார்
பெரியார்ப்பிழைத்தொழுகுவார். (2)

1431 இறந்தமைந்தசார்புடையராயினுமுய்யார்
சிறந்தமைந்தசீரார்செறின். (3)

ஆகச் செய்யுள் 22, பெரியாரைப்பிழையாமை முற்றிற்று.

---

## ௯௬-ம் அதி. குடிமை.

### விநாயகபுராணம்,

1432 உன்னன்மொழிதல்செயன்மூன்றுந்தொழுக்கமவாய்மை
நாணிழுக்கார், மன்னுமனையிறப்பிறந்தார்கண்மலர்தலீகையிக
ழாமை, நன்னர்மொழியுமவர்க்கேயாநன்மைபயவாவினைவறு
மை,பின்னவிடத்துமபுரியார்களேமகண்டாவினியறிமோ(1)

### அரிச்சந்திரசரிதை.

1433 நிலத்தியல்பாற்றேகொண்மூநீரியல்பதனுற்றறங்கள்
குலத்தியல்பெவர்க்குமன்னுவாழினுங்கெடினுங்குன்று
தலத்தரசன்றுநீங்கித்தவத்தனுனலுந்தொலலே
நலத்ததுபோமோவென்றுநரபதிக்கினிதுரைத்தான். (1)

### நீதிநெறிவிளக்கம்

1434 தத்தங்குலக்குறுகுடிமைக்குத்தப்பாமே
யொத்தகட்டப்பாட்டிற்றுன்றி—யெய்த்து
மறங்கடையிற்செல்லார்பிறனபொருளுமவெஃகா
புறங்கடையதாகும்பொருள். (1)

### இராமாயணம்.

1435 பிறந்திறந்துபோய்ப்பெறுவதுமிழப்பதும்புகழே
னிறந்திறம்பினுநியாயமேதிறம்பினுநெறியின
றிறந்திறம்பினுஞ்செய்தவந்திறம்பினுஞ்செயிர்தீர்
மறந்திறம்பினுமவரன்முறைதிறம்புதல்வழக்கோ. (1)

### நாலடியார்.

1436 உடுக்கையுலறியுடம்பழிந்தக்கண்ணுங்
குடிப்பிறப்பாளர்தங்கொள்கையிற்குன்று
ரிடுக்கண்டலைவந்தக்கண்ணும்பரிமா
கொடிப்புற்கறிக்குமோமற்று. (1

1437 சான்றாண்மைசாயலொழுக்கமிவைமூன்றும
வான்றோய்குடிபபிறந்தார்க்கல்லது—வான்றோயு
மைதவழ்வெற்பபடாதுபெருஞ்செல்வ
மெய்தியக்கண்ணும்பிறர்க்கு (2)

1438 இனநன்மையின்சொலொன்றீதன்மற்றேனை
மனநன்மையென்றிவையெல்லாங்—கனமணி
முத்தோடிமைக்குமுழங்குவரித்தண்சேர்பப
விற்பிறந்தார்கண்ணேயுள (3)

1439 ஒருபுடைபாம்புகொளினுமொருபுடை
யங்கண்மாஞாலம்விளக்குறூஉந்திங்கள்போற்
செல்லாமைசெவ்வனேர்நிற்பினுமொப்புரவிற்
கொல்கார்குடிப்பிறந்தார் (4)

1440 கடித்துக்கரும்பினைக்கண்டகாறு
மிடித்துநீர்கொள்ளினுமின்சுவைத்தேயாகும்
வடுப்படவைதிறந்தக்கண்ணுங்குடிப்பிறந்தார்
கூறார்தம்வாயிற்சிதைந்து. (5)

1441 கள்ளார்கள்ளுண்ணார்கடிவகடிந்தொரீஇ
யெள்ளிப்பிறரையிகழ்ந்துரையார்—தள்ளியும
வாயிற்பொய்கூறார்வடுவறுகாட்சியார்
சாயிற்பரிவதிலா. (6)

### திரிகடுகம்.

1442 கயவரைக்கையிகந்துவாழ்தனயவரை
நள்ளிருளுங்கைவிடாநட்டொழுகறெள்ளி

வடுவானவாராமறகாத்தலிம்மூன்றுங்
குடிமாசிலார்க்கேயுள. (1)

திருக்குறள்

1443 இறபிறநதாரகணணணல்லதில்லையியலபாகச
செபபமுநாணுமொருங்கு (1)

1444 அடுக்கியகோடி பெறினுங்குடிபபிறந்தார்
குன்றுவசெய்தலிலர். (2)

1445 சலமபறறிச்சார்பிலசெய்யாராமாசறற
குலம்பறறிவாழ்துமெனபார் (3)

1446 நலததினகணணின்மைதோன்றினவனைக்
குலததினகணையப்படும் (4)

ஆகச்செய்யுள் 15, குடிமை முற்றிற்று.

---

சும- அதி. நட்பு.

---

விநாயகபுராணம்.

1447 அழிதருநெறியிறசெலவினைவிலக்கியாமவழிச்செலுத்தி
யூழ்வினையா, லழிவுவநதுபபினதறருடனல்லாநதாக்கைவே
றன்றியாருயிராக, லொழிவகையின்றியுணர்ச்சியொத்தரு
றாலுணர்தொறுமுறநயமபோலக், கழிமகிழ்நாளும்பயி
றறுமவளரக்கலபபதேநட்பெனப்படுமால. (1)

1448 நனமதியுடைமைகுடிகுணநகுறறநல்வினததானுமெத்திற
ததும, பனமுறைபாயநதுநட்பினைக்கொள்கபாம்பொடுப
ழகினுமபிரித, லின்மையாமதனுலாய்நதலாலொருவரிடத
தாடபுமேறுறினவாசெய், புனமையுமபழியும்புணர்ந்திரு
பயனும்போககுவதுண்மையபுததிரனே. (2)

1449 கெடுதியிலுதவவல்லவர்நடபாறகினநிடாதொனறனைச்செ
யினுங், கெடும்வகைசெய்தலவேணடினதாமேகெழுவுதல

பணிவச்சமின்மை, படுதருமூழிற் புரியினுமவற்றைப்பழை
மையென்றறிந்துளமுவப்பி, னெடுங்கிலமுழுதுங்கேண்மை
யாமைந்தாரேனாலார் தாமுங்கேளாவார். (3)

1450 காதலரேனுமவிடுவிலமாதர்கள வரிற்றமக்குறல்குறிப
போர், பேதையர்கெடுதியுற்றூழியுதவார்பெருமபொருண
குவித்துப்பிரிபா, ராதருகருமந்தமமினுகாததாகவேகடி
பபவருளமு, மோதலுமொவ்வாமணிகெகழீஇமன்றினுற
ப்பழிப்பாரிவர்தமையே. (4)

நன்னெறி.

1451 நல்லார்செயுங்கேண்மைநாடோறுநன்று
மல்லார்செயுங்கேண்மையாகாதே—நல்லாய்கேள்
காய்முற்றிற்றின்றீங்கனியாமிளந்தளிர்நாள்
போய்முற்றினென்னாகிப்போம (1)

1452 கற்றறியார்செய்யுங்கடுநட்புந்தாங்கூடி
யுற்றாழியுந்தீமைநிகழ்வுள்ளதே—பொற்றொடீஇ
சென்றுபடாந்தசெழுங்கொடிமென்பூமலர்ந்த
வன்றேமணமுடையதாம். (2)

புறநானூறு.

1453 *விளைபதச்சீறிடநோக்கிவளைகதிர்
வல்சிகொண்டளைமல்கவைக்கு
மெலிமுயனறனையராகியுடையதம
வளனவலியுறுக்குமுளமிலாளரொ
டியைந்தகேண்மையிலலாகியரோ
கடுங்கட்கேழலிடம்படவீழ்ந்தென
வன்றவணுண்ணாதாகிவழிநாட்
பெருமலைவிடரகம்புலம்பவேட்டெழுந
திருங்களிறறொருத்தலவலமபடுக்கும
புலிபசித்தன்னமெலிவிலுள்ளத
துரனுடையாளர்கேண்மையொ
டியைந்தவைகலுளவாகியரோ (1)

1454 *பொன்னுந்துகிருமுத்தமன்னிய
மாமலைபயந்தகாமருமணியு
மிடைபடச்சேயவாயினுந்தொடைபுணர்ந்
தருவிலைநன்கலமமைக்குமகாலை
யொருவழித்தோன்றியாங்கென்றுஞ்சான்றோர்
சான்றோர்பாலராப
சாலார்சாலார்பாலராகுபவே (2)

### நாலடியார்.

455 காதலார்சொல்லுங்கடுஞ்சொல்லுவந்துரைக்கு
மேதிலாரின்சொலிற்றீதாமோ—போதெலா
மாதர்வண்டார்க்குமலிகடற்றண்சேர்ப்ப
வாவதறிவார்ப்பெறின். (1)

1456 வேற்றுமையின்றிக்கலந்திருவர்நட்டக்காற்
றேற்றாவொழுக்கமொருவன்கணுண்டாயி
னாற்றுந்துணையும்பொறுக்கபொறானாயிற்
றூற்றாதேதூரவிடல். (2)

1457 இன்னாசெயினுமினியவொழிகென்று
தன்னையேதானோவினல்லது—துன்னிக்
கலந்தாரைக்கைவிடுதலகானகநாட
விலங்கிற்கும்விள்ளலரிது. (3)

1458 பெரியவர்கேண்மைபிறைபோலநாளும்
வரிசைவரிசையாநந்தும—வரிசையால்
வானூர்மதியம்போல்வைகலுந்தேயுமே
தானேசிறியார்தொடர்பு. (4)

1459 கனைகடற்றண்சேர்ப்பகற்றறிந்தார்கேண்மை
நுனியிற்கரும்புதின்றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின்றன்னதகைத்தரோபண்பிலா
வீரமிலாளர்தொடர்பு. (5)

1460 கல்லாரேயாயினுங்கற்றாரைச்சேர்ந்தொழுகி
னல்லறிவுநாளுந்தலைப்படுவர்—தொல்சிறப்பி
னொண்ணிறப்பாதிரிப்பூச்சேர்தலாற்புத்தோடு
தண்ணீர்க்குத்தான்பயந்தாங்கு. (

1461 நளிகடற்றண்சேர்ப்பநாணிழற்போல
விளியுஞ்சிறியவர்கேண்மை—விளிவின்றி
யல்குநிழற்போலகன்றகன்றோடுமே
தொல்புகழாளர்தொடர்பு. (7

1462 நறுமலர்த்தண்கோதாய்நட்டார்க்குநட்டார்
மறுமையுஞ்செய்வதொன்றுண்டோ—இறுமளவு
மின்புறுவவின்புற்றெழீஇயவரோடு
துன்புறுவதுன்புறுக்கால். (8

1463 யானையனையவர்நண்பொரீஇநாயனையார்
கேண்மைதழீஇக்கொளல்வேண்டும்—யானை
யறிந்தறிந்தும்பாகனையேகொல்லுமெறிந்தவேன்
மெய்யதாவால்குழைக்குநாய். (9)

1464 பலநாளும்பக்கத்தாராயினுநெஞ்சிற்
சிலநாளுமொட்டாரோடொட்டார்—பலநாளு
நீத்தாரெனக்கைவிடலுண்டோதந்நெஞ்சத்
தியாத்தாரோடியாத்ததொடர்பு. (10)

1465 கோட்டுப்பூப்போலமலர்ந்துபிற்கூம்பாது
வேட்டதேவேட்டதாநட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போன்முன்மலர்ந்துபிற்கூம்புவாரை
நயப்பாருநட்பாருமில. (11)

1466 கடையாயார்நட்பிற்கமுகனையரேனை
யிடையாயார்தெங்கினனையர்—தலையாயா
ரெண்ணரும்பெண்ணைபோன்றிட்டஞான்றிட்டதே
தொன்மையுடையார்தொடர்பு. (12)

1467 ‡செறுத்தோறுடைப்பினுஞ்செம்புனலோடூடார்
மறுத்துஞ்சிறைசெய்வர்நீர்நசைவாழ்நர்
வெறுப்பவெறுப்பச்செயினும்பொறுப்பரே
தாமவேண்டிக்கொண்டார்தொடர்பு. (13)

1468 நலலாரெனததானனிவிரும்பிக்கொண்டாரை
யல்லாரெனினுமட ககிககொளல்வேண்டு
நெல்லுக்குமியுண்டுநீர்க்குநுரையுண்டு
புலலிதழ்பூவிற்குமுண்டு. (14)

1469 இன்னாசெயினுமவிடுதறகரியாரைத
துன்னார்துறததறகுவதோ—துன்னருஞ்சீ
விண்குத்துநீள்வரைவெற்பகளைபவோ
கண்குததிறறென்றுதங்கை (15)

1470 இலங்குநீர்த்தண்சேர்பபவின்னாசெயினுங்
கலந்துபழிகாணார்சான்றோர்—கலந்தபிற்
றீமையெடுத்துரைக்குந்திண்ணறிவில்லாதார்
தாமுமவரிற்கடை. (16)

1471 தங்கண்மரபிலலார்பின்சென்றுதாமவரை
யெங்கண்வணக்குதுமென்பவர்—புன்கேண்மை
நற்றளிர்ப்புன்னைமலருங்கடறசேர்ப்ப
கறகிள்ளிகைகயிழநதற்று. (17)

1472 பெருகுவதுபோலத்தோனறிவைததீபபோ
லொருபொழுதுஞ்செலலாதேநநது—மருகெல்லாஞ்
சந்தனநீள்சோலைச்சாரனமலைநாட
பநதமிலாளர்தொடர்பு. (18)

நான்மணிக்கடிகை.

1473 *பறைநன்றுபண்ணமையாயாழினிறைநின்ற
பெண்ணன்றுபீடிலாமாந்தரிற்—பண்ணழிந்

‡செறுத்தோறு=அடைக்குந்தோறும்

